Vol. XVII] APRIL, 1909. REGISTERED—M 108. [No. 4

வேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணு.
பழைய பிரதி, 6 „

சந்தாவிலை விவரம்.
ஒருவருஷத்துக்கு ரு. 4
6 மாதத்துக்கு „ 2–2




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

**DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா ரென்னுடையரேனு மிலர்.—திருக்குறள்.

A POPULAR NEW REVIEW & TAMIL MONTHLY
*Estd. May, 1892.*

கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்கவதற்குத்தக.—திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS. ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS

"Hitch your wagon to a star-"1-Emerson.

CONTENTS.



அடக்கம்.



"Our Theism is the Purification of the Human Mind"— Emerson.

Thick Paper Edition for Patrons.] *PUBLISHED BY* [Minimum Subscription Rs. 5

The Secretary, Diffusion of Knowledge Agency,

*Lalitalaya, Mylapore, Madras, S.*

For The Viveka Chintamani Publishing Committee.



In Paper Edition for the People.] [Subscription Price: Yearly Rs. 4

*"Like spailer, like the earth, and like a living creature He produces the Universe."—Upanishad.*

# The Viveka Chintamani.

ESTABLISHED 1892.

*The Oldest and The best Tamil Monthly: yearly Rs.4. Thick Paper Edition Rs.5. in Advance.*

Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

LALITALAYA, MYLAPORE, S.

EDITOR
C. V. SWAMINATHA AIYAR.

*Madras, January 1909*

# விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4. வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

## விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே, விவேகசிந்தாமணி, இப்பொழுது மாதந்தோறும் ஒழுங்காக வெளியாகி வருகிறது. இத்துடன் தங்கள் பார்வைக்கு ஒரு பத்திரிகை யனுப்பியிருக்கிறோம். விவேகசிந்தாமணி யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறைந்திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், ஸ்வபாஷா ஞானம், நீதிபோதம், வேதாந்தசாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள், பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்யானுகூல ஸாதனங்கள், அப்போதப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப் பெறுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ்நாடெல்லாம் ஜ்வலித்துவரும் இம்மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதாரராகச்சேர்ந்து ஆதரித்துவரக்கோருகிறோம். மனிதர்களுக்குஉய்யும் வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச்செய்யும் உண்மையான ஸத்குருவைப் போல, விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத்து தவியாய் நின்றுவிவேகத்தைவளர்க்கும் குருவாய்த்தோற்று மென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக்காரர்களாய்ச் சேரக் கேட்டுக்கொள்ளுகிறோம். இப்பத்திரிகை சென்ற பதினாறு வருஷங்களாக இடையறாது நடைபெற்று வருகினறது. இடையே அச்சாபீஸார் செய்த தவறுதலால் ஆகஸ்டு ஸெப்டெம்பர் மாசத்து சஞ்சிகைகள் தவக்கப்பட்டாலும், அதனால் குற்றமின்றி அதைத்தொடர்ந்து பத்திரிகை நடந்துவர ஏற்பாடாகி 16-வது வால்யம் 12-சஞ்சிகைகளும் சரியாக முடிந்துவிட்டன.

## 1909 ஹூ ஜனவரி மீ முதல் 17-வது வால்யம் ஆரம்பம்.

விவேகசிந்தாமணிக்குச் சந்தாதாரர்களாகச்சேர விரும்புகிறவர்கள் அதன் ஒரு வருஷசந்தா ரூபாய் நாலையும் முன்பணமாக, மைலாப்பூர், லலிதாலயம், அறிவைப்பரவச்செய்யும் ஏஜன்ஸி காரியதரிசி ஸி. வி. ஸ்வாமிநாதையர் பேருக்கு அனுப்பி, அவரவர்கள்பேரை ரிஜிஸ்தர் செய்துகொள்ளவேண்டும். முன்பணமனுப்பாதவர்களுக்கு V. P. P. யில் ஒரு வருஷ சநதாவுக்குப் பத்திரிகை யனுப்பப்படும்.

ஸி. வி. ஸ்வாமிநாதய்யர்,
பத்திராசிரியா.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயா, பி. ஏ. பி. எல்.,
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி.

## ORDER FORM.

ஐயா, 190

Please eurol me as a subscriber and send the Vivekachintamani by V. P. P. for a year's subscription, viz. Rs. 4-1-0

நீங்கள் அனுப்பிய மாதிரிக் காபியை வாசித்துப் பார்த்தேன். விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒரு வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P மூலமாக அனுப்பக்கோருகிறேன். தவறுமல் தபாலாபீஸில் பணம் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர் ______________________

தொழில் ______________________

ஊர் விலாசம் ______________________

போஸ்ட் ______________________

"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is,
but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."
"Seek Truth wherever you find it," But "Make your choice and stick to it till you reach the End."
ஸத்யம் வத,—**Speak the Truth.**

**"Hitch Your Wagon to a Star"**

**"To Thine Own Self be True"**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்சத்.] [Good is Love: Knowledge is Power. *Aum*

ஸத்யமே ஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் **17.**] **1909**-ஹு ஏப்ரல்மீ, ஸௌமியஹு சித்திரைமு [சஞ்சிகை **4.**

## The Up-Building of a Nation's Happiness.

## "THE CHARACTER OF THE INDIVIDUAL IS THE CHARACTER OF THE NATION."

"You, I doubt not, hope to take part in the stir and movement and to share in the shaping of the nation, in promoting its unity and building its happiness. The up-building of nation's happiness is not the work of a day, nor of many a decade. It is a great work (so long as it be Heavenwards), and it is worthy of your best endeavour, but it can only be achieved by infinite labour, infinite sacrifice and subordination of self. And You? Can you rise to the occasion? A Nation can only be strong if its component parts are strong. Its conditions of life can only be healthy, if its manhood be upright, virile, loyal and true; for the character of the individual is the character of the nation. Each individual citizen is one of the blood corpuscles of the nation, and just as in the human frame, if the blood corpuscles are unhealthy or diseased, the energy of the whole body will languish and its capacity for good work be reduced; So the failure on the part of each one of you to rise to the responsibilities of citizenship, will be a clog on your country's progress and a hindrance to the happiness of your fellow-men."—*The Chancellor's Address to the Graduates at the recent Convocation of the Madras University.*

## தேசசமஷ்டியின் யோகக்ஷேமம்.

---

"அப்ராப்த ப்ராபணம்யோக:
க்ஷேமோ லப்தஸ்ய பாலநம்."

பெறலரும் பேறுபெறல் யோகம்: பெற்ற தைக் காப்பாற்றல் க்ஷேமம். ஆகவே யோக க்ஷேமம் என்னும் வார்த்தையில் சம்பத்து விர்த்தியெல்லாம் அடங்கிவிட்டது. வியஷ்டி பாவபிரத்தியேகாத்மாவைப் போல் சமஷ்டி பாவ ரசுவராத்மா ஒன்று உண்டு என்று சொல்லியிருக்கிறோம். அப்படியே தேஹமாகிய க்ஷேத்திரத்தை யொட்டியுள்ள க்ஷேத்திரஜ்ஞ ஆத்மாவைப்போல தேசமாகிய க்ஷேத்திரத்தைத் யொட்டியுள்ள க்ஷேத்திரஜ்ஞ சமஷ்டி யாத்மா ஒன்றுண்டு. இந்த தேசசமஷ்டியாத்

மாவைத்தான் இங்கிலீஷில் "நேஷன்" என்று சொல்லும் பதத்திற்கு லக்ஷியார்த்தமாகக் கொள்ளவேண்டும். இந்தியாவில் "நேஷன்" என்று சொல்லப்படும் வார்த்தைக்குப் பொருந்திய இலக்ஷணமுள்ள சமஷ்டிபாவமூர்த்தி இல்லையென்பது மேற்றிசையார் சித்தாந்தம். அதையே அவர்கள் வழிபற்றி அவர்கள் எண்ணங்களையும் வார்த்தைகளையும் கேட்டு மயங்கியுள்ள இங்கிலீஷ் படித்த இந்தியர்களும் சொல்வதுண்டு. இந்தியா எக்காலத்திலும் சமஷ்டிபாவ ஐக்கியம் கொண்டு அதில் வசிக்கும் கோடானுகோடி ஜனங்களும் ஏகீபாவத்தால் ஒரு தேசஸ்தாராக விளங்கினதில்லையென்று விதேச விற்பன்னர்கள் சொல்கிறார்கள். இதை நாம் ஒப்புக்கொள்ளக் கூடியதாயில்லை. ஏனெனில் "நேஷன்" என்று சொல்லும் ஒருதேச சமஷ்டியின் ஜீவகாலம் அற்பமனுஷன் ஜீவகாலத்தைப்போல் அவ்வளவு குறுகினதில்லை. அதுவும் இந்தியாவைப்போல் பூர்வந்தொட்டு நாகரிகத்தில் பேர்பெற்று விளங்கிய ஒரு மஹாதேசத்தின் ஆயுட்காலம் குறைந்தது பல்லாயிரம் வருஷங்கள் கொண்டதாயிருக்கவேண்டும். அப்படியிருந்தால் அத்தேசம் ஸதா உன்னத நிலையிலேயே யிருப்பது கூடாமை. பகலுண்டானால் இரவுண்டு. விழிப்புண்டானால் தூக்கமுண்டு. பிரம்மாகூட மானுட வருஷங்களில் அனேக லக்ஷம் வருஷங்கொண்ட அவருடைய காலம் கழிந்தபின் பிரளயத்தில் தூங்கிவிடுகிறார். ஆகவே, எத்தேசமும் ஆயிரம் காலம் உயர்ந்து வாழ்ந்தால், ஆயிரம் காலம் தாழ்ந்து உறங்கும். இது பிரகிருதிதர்மம்: இதில் குற்றநற்றமிரண்டுமில்லை. ஆகவே இந்தியா இப்பொழுது உறங்கிக்கொண்டிருந்தால், அதனால் இந்தியாவின் சமஷ்டிபாவமூர்த்தியே இல்லையென்று சாதிப்பது ஒப்புக்கொள்ளத் தக்கதாயில்லை. பரதசக்ரவத்தி ஆண்டகாலமுதற்கொண்டு இந்தியா பாரதவருஷத்தில் பரதக்கண்டம் என்றுபேர்பெற்றுவிளங்கிவருகிறது. பரதக்கண்டத்தின்கீர்த்தி மங்கியிருந்தாலும் அதன்பேர் மறையவில்லை. கோடானுகோடி ஜனங்கள் வருஷந்தோறும் நேரும் புண்ணியகாலங்களிலெல்லாம் "பாரதவருஷத்திலே பரதக்கண்டத்திலே, இன்னபாரிசத்தில் இன்ன க்ஷேத்திரத்திலிருந்து இந்த சங்கல்பத்தைச் செய்துகொண்டு இக்காரியத்தைத் துவக்குகிறேன்' என்று மனமொருவழிப்பட்டு மந்திரோச்சாரணமாக வாக்மனோ சங்கல்பம் செய்து வருகிறார்களே! இதுகளெல்லாம் பொய்யாகிவிடுமா? இங்கிலீஷ் படித்தவர்கள் ஜாதிமதப்பிரஷ்டர்களாய் மந்திரசக்தியிழந்தவர்களானால், மந்திரத்துக்கே சக்தியில்லையென்று சாதித்துவிடலாமா? பூனை கண்ணை மூடிக்கொண்டால் உலகம் அஸ்தமித்துப்போய்விடுமா? ஆனாலும் பூனைக்குமட்டும் எண்ணம் அப்படித்தான். அந்தஉபமானத்தை நீர் ஸ்தாபிக்கப்போகும் கக்ஷிக்கு ஏன் சொல்லக்கூடாதென்றால், நாம் இங்கே கக்ஷிகட்டிப் பேச வரவில்லை. உண்மையை உள்ளபடி விளக்க தர்மத்தைபிரத்தியக்ஷஉதாரணங்களால் எடுத்து விளக்குகிறோம். நாம் சொல்லும் உண்மை யாருக்குப் பொருத்தமாயிருந்தாலும் சரி, அவர்கள் அதையேற்றுக்கொண்டாலும் சரி, தள்ளினாலும் சரி, அதனால் நமக்கு பாதகசாதகமொன்றுமில்லை.

இந்தியா பூர்வீகந்தொட்டு க்ஷேத்திரக்ஷேத்திரஜ்ஞ பாவயோகத்தால் சமஷ்டிபாவமூர்த்தி பிராணப் பிரதிஷ்டை செய்யப்பெற்று விளங்குவதன்றி அனேகம் ஆயிரம் வருஷகாலங்களாக அந்த சமஷ்பாவமூர்த்தி இந்தியாவிலுள்ள பிரஜைகளால் பக்திசிரத்தையோடு பூஜித்தும் [illegible]ப்படுகிறது. ஆகையால் இந்தியாவில் "நாஷனலிடி" என்றுசொல்லும் "சம்ஷ்டி.பாவ மூர்த்திப்பிரதிஷ்டை" இனிமேல்தான் புதிதாய்செய்யப்படவேண்டுமென்றும் இற்குமுன் அந்தபாவமே இத்தேசத்தில் கிடையாது என்றும் சொன்னால், அந்த்வார்த்தை உண்மைக்கு ஒவ்வாததாகையால் வீண்வார்த்தை யென்று தள்ளத்தக்க

தேயாகும். ஆனால் இக்காலத்து நவநாகரிக புஞ்சங்களான சிலர், இடையே தம் நிலையை மறந்து துறந்திருந்த தோஷத்தால், அந்நிய பாவங்கள் பற்றி ஆத்மபுத்தியிழந்தவர்களாயிருப்பதால், அவர்கள் மனதைத்திருத்த அழுக்கைக் கொண்டு அழுக்கைப்போக்குவதைப்போல, நவநாகரிக மோகத்தால் அவர்கள் இழந்த அறிவை நவநாகரிக சிரேஷ்டர்கள் போதனையால்தானே அவர்கள் திரும்பப் பெறுவதுமிகவும் சிலாக்கியமும் சகஜமுமானதென்றே சொல்வோம் ஆகையால் ஆத்மார்த்தமான உண்மைகளை யார் சொன்னாலும் நாம் அங்கீகரித்தேற்க வேண்டியதே. இங்கே சொன்னவர்களைப் பற்றி விசாரணையில்லை. சொல்லின் திறமே நாம் கொள்ளத்தக்கது. சொல்லுக்குத் திறம் எதனாலுண்டாகும்? "சொல்வன்மையினால்" சொல்லுக்குத் திறமுண்டாகாது. சொல்வன்மையினால் மெய்யைப் பொய் போலவும் பொய்யை மெய்போலவும் மாற்றலாம் என்று நாம் ஒப்புக்கொண்டாலும், "கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளில் வெளியாகும்" என்றதோர் வாக்கை நாம் மறக்க காலம் முந்தவில்லை. ஆதலால் சொல்லுக்குத் திறம் உண்மையினாலன்றி வார்த்தை ஜோடிப்பினாலல்ல. வார்த்தை ஜோடிப்பினால் அறிவு கெட்டவரை மயங்கவடிக்கலாமானாலும் உண்மையை வெகு காலம் ஒளிக்கமுடியாது. ஆகையால் உண்மை எந்த வாக்கில் உறைந்து விளங்குகிறதோ அது நமக்கு சத்தியவாக்காம். அதைச் சொன்னவன் தன்மை நமக்குப் பெரிதல்ல. சொல்லின் குணமறிந்தார்க்கு; சொல்வான் ஓர் ஸ்வப்பன புருஷன் ஒத்தவன். இப்படியாக நாம் இந்தியாவில் சமஷ்டிபாவ மூர்த்தியை விடாது பூஜைசெய்து வரல்வேண்டும். இப்பொழுது இங்கிலீஷ் படித்தவர்களும் இந்த பூஜை துவக்கியிருக்கிறார்கள், அல்லது துவக்கவேண்டியவர்களாயிருக்கிறார்களென்பதைக் கேட்கவும் பார்க்கவும் பாரதமாதாவின் மனம் பொங்கிப் பூரிக்காதிருக்குமா? இருக்காது. ஆகையால் இந்தியாவின் சமஷ்டிபாவ யோக க்ஷேமம் வரவர விர்த்தியாய் வருவதைப்பார்க்க நாம் சந்தோஷப்படுகிறோம். நாம் யார்? இந்தியாவென்னும் பாரதமாதாவின் வயிற்றிலுள்ள சிசு. அதாவது "இந்தியன் நாஷனலிடி" என்றுசொல்லும் "சமஷ்டி பாவமூர்த்தியின் கரு உரு." இக்கருவுருக்குள் உயிர்புகுந்தாட்டுங்கால் அது துள்ளிக்குதிக்கும். இதையே கருவிற் சிசுவுற்பன்னம் என்று சொல்லுகிறது. இந்தியா இப்பொழுது சமஷ்டிபாவமூர்த்தியைப்பெறக்கருத்தரித்து நிற்கின்றது. பெறலரும் இப் பேற்றைப் பெறவிருப்பது பாரத யோகமாம். நேற்றிராத்திரி திருமயிலையில் 9-ம் திருவிழாவன்று கபாலீசுவரர் யோகவேஷத்தோடு பிக்ஷாடன மூர்த்தியாக வீதிவலம் வந்தார். அப்பொழுது ஸ்வாமியையே பர்த்தாவாகப் பெறவேண்டுமென்று யோகம் செய்துகொண்டிருந்த அம்மன் அவர் பிக்ஷாடனராய்ச் சுற்றுவதைக்கண்டு அவரைப் பிரதக்ஷிணம் பண்ணி நமஸ்கரித்து மங்கள ஆரத்தியினால் அவரோடும் மனோலயஐக்கியம்பெற்று நின்றாள். நேற்று இராத்திரி ஸ்வாமி, அம்மன் இருவரும் யோகத்தினால் பெற்ற பேற்றை இன்றுகலியாணம் செய்து கொண்டு அப்பேறு நிலைத்திருக்கும்படி காப்பாற்றிக் கொள்வார்கள். இதுதான் க்ஷேமம். க்ஷேத்திரமூர்த்திக்குக்ஷேமமானால் அது க்ஷேத்திரத்துக்கும்க்ஷேமமே.

தேசசமஷ்டிபாவத்தில் இந்த யோக க்ஷேமத்தை நாம் அடையும் வழி யின்னதென்று நமது இராஜதானி கவர்னர் கனம்பொருந்திய ஸர் ஆர்தர் லாலியவர்களும் இந்த வருஷம் கான்வொகேஷனில் வித்தியாபட்டம் பெற்றவர்களுக்குச் செய்த உபதேசத்தில் நன்றாக வெடுத்துப்போதித்திருக்கிறார். அவர் சொல்லியவுண்மை உபதேசம் இது:—

"இந்தியாவில் சமஷ்டிபாவம் விர்த்தியாய் வருவதற்கான ஆரவாரங்களில் நீங்களும்சேர்ந்து அதன் யோகக்ஷேமத்துக்காகப் பாடுபடவேண்டுமென்று நீங்கள் எண்ணியிருக்கிறீர்

கள் என்பதிற்சந்தேகமில்லை. ஒருதேசத்தின் சமஷ்டிபாவம் மூர்த்திகரித்து நிற்க அதன் யோக க்ஷேமத்துக்காக உழைப்பதென்ருல் அது ஒரு நாள் இரண்டுநாள் வேலையல்ல; 10 20, 30, வருஷங்களில் முடிவதுமல்ல. யோக க்ஷேமம் ஊர்த்தமுகமாயுள்ள வரையில் அது 'மாகர்த்தாக்கள்' என்று சொல்லப்படும் பிரஹ்மஜ்ஞானிகள் செய்யத்தக்கவேலை. அதில் நீங்கள் பிரயாசைப்பட்டுழைப்பது சிலாக்கியமே: ஆனுல் அந்தவேலைமட்டும் கால, தேச வரையரை கடந்து, தன்னைக்கொடுத்துஉழைத்தாலன்றி அது சித்திபெருது. நீங்கள் அப்படி யுழைக்கக்கூடியவர்களாவீர்களா? இந்த சமயத்துக்குத்தக்கபடி ஊர்த்துவமுகமாகி ஆத்மோத்தாரணம் செய்து மேலெழவல்லவர்களாவீர்களா? சமஷ்டியின் பலம் வியஷ்டியின் பலத்தைப் பொறுத்ததாம். ஒதிபெருத்தால் உத்திரமாகாதுபோல் செடியடர்ந்தால் காடாகாது. தேவதாருபோன்ற மஹா விருக்ஷங்கள் அடர்ந்தால் அது வனமாகுமேயன்றி மற்றப்படி புல்லும் பூண்டும்சேர்ந்தால் வனமாகாது. அது புதராகும்.

"வியஷ்டிபாவம் எப்படியோ அப்படியே சமஷ்டிபாவமுமாதலால், பிரத்தியேக நபர்களுடைய குணமும் மணமும் சிறந்திருக்காவிட்டால் சமஷ்டிபாவமும் சிறந்திருக்காது. ஒவ்வொரு கிரஹஸ்தனும் சமஷ்டிபாவ மூர்த்தியின் இரத்தநாடியிலோடும் இரத்தத்திலுள்ள ஜீவஅணுத்திரளாம் ஒரு 'கார்பஸ்லுக்கு' சமானம். தேகத்தில் ரத்தம் கெட்டுப்போனுல் எப்படிதேகம் வலியிழந்து சோர்ந்து போகிறதோ அப்படிப்போலவே, பிரத்தியேக நபர் குணக்கேடராயின், சமஷ்டிபாவமூர்த்தி வலியிழந்து சோர்ந்து சோபிக்காதுபோம். ஆகையால் உங்களில் துராத்மாவாகவுள்ள ஒவ்வொருவரும், உங்கள் உடன்பிறந்த மனிதர்களின் க்ஷேமலாபத்துக்கு இடையூருன துரோகியாவீர்கள் என்பதை உணர்ந்தொழுகவேண்டும்." என்ருர். இந்த உண்மையைச்சொல்லி வற்புறுத்திய வாய்க்குக் கற்கண்டு போடல்வேண்டும்.



## THE DIVINITY OF CHASTITY.

## பத்தினிக்கடவுள்.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழு
பெய்யெனப் பெய்யு மழை." [வாள்

என்பது தெய்வப்புலமைபூண்ட திருவள்ளுவநாயனுர் திருவாக்கு. தன்னைக்கொண்ட கணவனை யொருத்தி தெய்வமாய்க் கொண்டாடுவாளெனின் ஜடமானபிருகிருதியும் இவளைப் பணிந்தொழுகும் என்பது இதன்கருத்து. இதனையே

"கொண்டான்குறிப்பறிவாள்பெண்டாட்டி,
(இவள்) பெய் யெனப்பெய்யுமழை" என்றும்
"சொண்டானிற்றுன்னிய கேளிர் பிறரில்லை"

என்றும் பிற்காலத்திய கவிசிரேஷ்டர்களும் புகழ்ந்துள்ளார். அன்புடைய மனைவியின் குணங்கள் யாவையோவெனில், 'சாவீற் சாதல்,' 'புணர்வு நனிவேட்டல்,' 'நோவில் நோதல்,' 'நன்கினிது மொழிதல்,' 'பிரிவுநனி இரங்கல்,' என்பனபோன்றவை என்றுமற்றும் மேலோர் கூறுவர். இக்குணங்களையுடைய மனைவியையே பத்தினியென்றும், ஸதியென்றும், ஸஹதர்ம்மசாரிணீ யென்றும் பேர்கூறவது வழக்கம். பத்தினியென்பாள் தன்கணவன் சம்பாதித்துக்கொணரும் பொருள்களைக் கொண்டு அதனுலே அவன் இஃபுற சுபோச்சியமான ஆகாராதிகள் செய்தூட்டி அவன் இன்பமடைவதினுல் தானும் இன்புற்று இருவரும் மகிழ்ந்து வாழ்ந்திருப்பள். "ஆஹா! நீர் கூறுவது பக்ஷபாதமன்ருே? மனைவி தன்கணவன் மனதிற்கிணங்க இருக்கவேண்டுமென்பதை வற்புறுத்தினீரே யொழிய, இவள் விஷய மொன்றையும் எடுத்துக்கொண்டு மன்ருடவில்லையே" எனவும் கூடும். அவ்வாறன்று. கணவனென்பவன், தனக்கு மாத்திரமேயன்றி,

தன் குடும்பத்துக்கு வேண்டும்பொருள், உத்தியோகமுதலியவைகளிலமர்ந்து பாடுபட்டு, சம்பாதித்துக் கொணர்ந்து தன் அகத்துக்காரியிடம் ஒப்புவிக்கிறான். அதாவது, தனார்ஜனம் முதலிய, வெளியில் பாடுபடும்படியான விஷயங்கட்கு கணவன் உடம்பட்டிருக்கிறான்; இக்கஷ்டமொன்றே இவன் பாகத்துக்குப்போதுமானது. சம்பாதித்து கிரககிருத்தியத்துக்கென்று சமர்ப்பித்தபொருள் அகத்தில்கொடுத்து விடுவானேல், இவன்கடமையும் இவன் பாரமும் இவனைவிட்டு நீங்கின. அகத்துக்குடையாள் அல்லது அகத்துக்காரி என்பவள், அகத்துக்குள்பட்ட சம்சாரத்துக்கு வேண்டிய கருமங்கள் செய்யக்கடமைப்பட்டவளாதலின், இப்பொருளைக்கொண்டு, தன்வீட்டுக்காரியங்களை சரிவரப்பார்த்துத்தேர்ந்து நேரான விநியோகஞ்செய்து கணவனையும் குடும்பத்தையும் மகிழ்விப்பள்: அதாவது, அதிகமாய்ச் செலவுசெய்து கணவனை கடனிலாழ்த்தி, அதனால் அவன் ஜன்மத்தை வெறுக்கச்செய்யாமலும், கொடுத்த பொருளை தனக்கென்று முடிபோட்டு, வீட்டுக்காரியங்களை கவனியாமலும் அதனால் கணவனுக்குசாப்பாடுமுதலிய சௌகரியங்கட்கு அபாவ நேரும்படிசெய்து அவன் மனமழுங்கச்செய்யாது, அவனுக்கு ஹிதகரமானவற்றைச்செய்தலாகிய கருமம்பூண்டு நடப்பள். இவ்விதமாய்,

"இருவரும் பூண்டீர்ப்பினல்லால், செல்லாது வான்சகடம்" என்று கற்று வல்லோரும் கனிமொழியால் கூறியுள்ளார். சம்சாரமாகிய ரதத்தில் பூட்டிய இருகுதிரைகளும் மனமொத்து, தம்மாலியன்ற மட்டும் ஒரே வழி இழுத்துச் சென்றாலன்றி அது நேரே அவ்வழி போக ஒண்ணுமோ?

"மனைமாட்சி யில்லாள்கணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித்தாயினுமில்."

இல்லறத்துக்குத்தகுந்த குணங்களில்லா மனையாளோடு எவ்வகையானமற்றசிறப்புகளிருப்பினும், வாழ்வது சுகமற்றது.; இது திண்ணம்.

இல்லறத்துக்கு அத்தியாவசியமாய் வேண்டியன அன்பும், கடமைப்பாடுமே. பரஸ்பரம் அன்புடைய கிரகஸ்தனும் அவன் மனைவியும் தத்தமக்கேற்பட்ட கடமைகளை சிரசாவகித்து, சம்சாரதத்தைச்செலுத்திச் செல்வதோடுங்கூட, தம்முடல், பொருள், ஆவியென்பதனை தம்முள்பேதமின்றி கொடுத்துக் கொண்டும்வாழ்வார்கள் ஆயின் இவ்வாறுகொடுத்துக்கொள்ளுதலேஇவ்வன்பிற்குசான்றல்ல. இது பலகாரணங்களால் நேரும் என்பதை வெகு அழகான நடையில் ஓர் புராதன தமிழ்வித்துவான் அடியில் வருமாறு வர்ணித்துள்ளார். *"சாவிற்சாதல்' என்பது அன்பினானே நிகழ்வதன்று; பிணியுடையளாய்வாழ்க்கையைமுனிந்து இது தலைக்கீடாகச் சாவலென்று சாவவும்பெறும்; இனிக் 'கண்டீரே! குடுமிக்கூந்தலில் நறுநெய் பெய்து, கொண்டானிற் பின்னையுமிருந்து, சோறுதின்று வாழ்கின்றாள்! ஓ!கொடியளேகாண்! என்றுநித்தலும் பழிதூற்றப் பட்டிருந்து, பின்னுமேஒருநாட்சாவன், அதனான் இன்றேசாவனெனச்சாவவும் பெறும்; அதுவன்றிப்புகழ்வேண்டிச் சாவவும்பெறும்; கணவனுடன் செத்தார்சுவர்க்கம்புகுவரென்னும் உரைகேட்டு அதுவேட்கையானும் சாம் ; அப்பரிசன்றி அன்பினானும் சாம் ; இவ்வாறு தன்னுடைய இனிய உயிரையே ஒருத்தி விட்டு நீங்கத் துணிவாளானால் பொருள் முதலியன அவட்கு லக்ஷியமாமா?

---

* [இதற்கு அர்த்தம்:—ஒருத்திதன்கணவனிறந்ததும் தானும் அவனுடன் இறப்பேனென்று நிச்சயித்துக் கொள்வாளானால், அதற்கு அடியில் வரும் பலவும் காரணமாகலாம். முதலாவது, அவள் தன்கணவன் வாழ்ந்திருந்த காலத்திலேயே ஒரு ஆறா வியாதியால் வெகு காலம் வாதைப்பட்டிருக்கலாம். இவன் இறந்ததும், இனியாகிலும்

இவ்வியாதியினின்றும் தப்பும்படி இவனுடன் சககமனம் செய்துவிடுகிறேன் என்று துணியலாம். இத்துணிவு கணவனிறந்த துக்கத்துக்காகவன்று, தன்னைப் பீரவென்பது காரணமாக வுடையது. இனி, ஊரார் இவளைக் குறித்து "பார்த்தீர்களா, அந்தப்பெண், அகமுடையான் செத்தும், கொஞ்சமேனும் துக்கமில்லாமல், தலைமயிரை திவசம்பிரதி வாசனை எண்ணெய்களை யெல்லாம் தடவி வாரிக்கொண்டு, புருஷன் காலத்துக்குப் பின்னையும் சௌக்கியமாயிருந்து கொண்டு நன்றாய் சாப்பிட்டுக்கொண்டு வாழ்கிறாளே! அப்பா மகா துஷ்டப்பெண்ணம்மா அவள்!" என்று பழி தூற்றுவார்களே! என்றைக்காயினும் ஒரு நாள் நான் சாகத்தானே வேண்டும், ஆகலால் அதை இப்பொழுதே ஏற்றுக்கொண்டு செத்தகணவனுடன் சஹகமனஞ்செய்து விடுவோமென்று சாவிற்சாதலென்னும் குணத்தைக் காட்டலாம். அப்படி அவள் செய்யினும், அது ஊராருக்குப் பயந்து செய்தது என்னப்படுமே யன்றி, கணவனிட மிருந்த அன்புக்கு என்னலாகாது. இவ்வாறு துணிந்தது ஊரார்க்குப் பயந்து என்பதுதான்.

இதுவன்றி, "நாம் இன்று சஹகமனஞ் செய்தால் லோகத்தார் அடா! இவளன்றோ மகாபத்தினி யாவாள்! இவளுக்குக் கோயில் முதலியன எடுப்போம். இவள் விஷயமாக ஒருபுராணமெழுதுவோம்" என்று தன்னைப் புகழ்வார்கள் என்னும் காரணத்தாலும் ஒருத்தி சாகவும் கூடும். இது தனக்கு பிரதாபம்வேண்டிச் செய்தது. அன்றியும், தம் கணவருடனிறந்தார் சுவர்க்கத்திற்கு நேரே செல்வார் என்னும் சாஸ்திரங்கேட்டு, சாவாரும் உளர். இது சுவர்க்காபேக்ஷைபால் செத்ததேயன்றி கணவன் பிரிவிற்கு அனுராகப்பட்டு இந்த உடலை யிழப்பேனென்று செத்ததன்று. இவையெல்லாமில்லாமல் வாஸ்தவமாய், கணவனும் தானும் ஒருயிராயிருந்து வாழ்ந்துவந்தபிறகு அவன் உயிர் போகவே, தன்னுயிரும் போனதாகவும், அவனின்றித் தான் பிழைக்கமுடியாமலும் ஒருத்தி உடனே உயிர் துறக்கவும் கூடும். இது அன்பினால் செய்த சஹகமனமெனப்படும்.]

இம்மகாபத்தினியை வேட்கப் புண்ணியஞ் செய்திருந்த பரமபாக்கியவான், எத்தனை ஏழையாயினும், நித்தியோபவாசம் செய்கிற காலத்தும், எப்பொழுதும் மனம் மகிழ்ந்தவ்வியவனாயிருப்பான். "ஒருவனுக்கில்லாள் நற்குண நற்செய்கையளாயினக்கால் இல்லாதது யாது? அவள் அன்னளல்லாக்கால் உள்ளது யாது?" நற்குண சம்பன்னை யானதினால் கணவன் மனமகிழ்ந்து தன்மனையாளோடு வாழ்ந்திருத்தற்கும் அழியா அன்புடையனாகவுமிருத்தற்கும் இயலுகின்றது.

அன்பு பழுத்து ஒழுகும் பத்தினியர்க்கு பஞ்சபூதங்களும் பணிசெய்யு மென்று முன்னரே சொன்னோம். அங்ஙனம் நடந்த திருஷ்டாந்தங்கள் புராணப் பிரசித்தமன்றோ! மகா ஸதியாகிய சீதாபிராட்டியார்க்கு வாயுபுத்திரனை அனுமார் செய்த தொண்டுகள் சிலவேயோ? ஜமதக்கினி ரிஷியின் பத்தினி பிரதி தினம் ஆற்றுக்குச்சென்று ஸ்நானஞ் செய்து பிறகு, பதிவிரதா தர்மத்தின் பலத்தால் ஆற்று மணலை யெடுத்துக் குடமாகச்செய்து அதில் நீரை மொண்டு வீடுவந்துசேர்வள். இவள் கையில் மணலும் குடமாகவில்லையோ? காவிரிப்பட்டணத்தில் மகாதனிகனை வர்த்தகனுக்குப் பிறந்து, தன் தந்தைக்குச் சமான ஸ்தனை வணிகன் மகனாகிய கோவலனென்னும் புருஷனை மணந்து, அவன் துச்சரிதை செய்து வந்தானாகிலும்,

"கண்டாரிகழ்வனவேகாதலன்றான்செய்திடினும்
கொண்டானையல்லாலறியாக்குலமகள்போல"

தான் அதை ஒருக்காலும் கவனியாமல், அவனுக்கு ஹிதந்தேடிவந்த கண்ணகி என்பாளொரு மகாபத்தினியின் சரித்திரம் அநேகமாய்எல்லாரும்அறிவர். ஆயினும்இம்மகாசதி

யின்சரித்திரத்தை இலைத அறியாதவர்க்காக இவ்விடத்தில் சுருக்கி எழுதுவோம்.

மாதவியென்னும் கூத்தஸ்திரீயிடம் மனம் பற்றினவனாய்,

“வம்புலாம்கூந்தல்மனைவியைத்துறந்து
பிற......தாரத்தைநம்பி”

அவளோடே காலங்கழித்துவந்த கோவலன், ஒருநாள் மாதவி இனியராகலோடு, பிறனிடம் தன்கருத்துடையஸ்திரீ பாடிய பாட்டொன்றைப்பாடவே, மாதவியே பிறனிடம் மனப்பற்றுடையளானாள் என்று தவறாய்த் துணிந்து அவளை சடக்கென்றுநீத்து, தன் ஸ்திரீயாகிய கண்ணகியிடம் துக்காக்கிராந்தனாய்த்திரும்பினான். அப்பொழுது,

“அடுத்ததுகாட்டும் பளிங்கேபோல்நெஞ்சம்
கடுத்ததுகாட்டும் முகம்”

என்பதற்கேற்ப, மனத் துயரத்தைக்கண்டு, கண்ணகி, கைப்பொருளிழந்து இனி தன்கூத்தியர்க்குக் கொடுக்கத் தனமில்லையென்று வருத்தப்படுகிறார் தன்பர்த்தாவென்று, நினைத்துத், தன்காலிலணிந்த இருசதங்கைகளையும் எடுத்து கோவலன் முன்வைத்து இவற்றை மாதவிக்குக் கொடுக்கலாமே, கொடுக்கப் பொருளில்லையென்று, என்னிடம்இவை போன்ற ஆபரணங்களிருக்கிறமட்டும், தாங்கள் மனம் வருந்தலாமோவென்று, கன்னெஞ்சுமுருகும்வண்ணம், விநயத்துடனும், அன்பு மிக்கீட்டினாலும் செப்ப, கோவலன், இதுகாறும், இம்மகாபத்னிவிஷயம் தான் பட்ட அபசாரத்துக்கு இரங்கி,

“அரும்பெறற்பாவாய்! ஆருயிர்மருந்தே!
பெருங்குடிவாணிகன் பெருமடமகளே!
அலையிடைப்பிறவா அமிழ்தேயென்கோ
மலையிடைப்பிறவா மருந்தேயென்கோ
யாழிடைப்பிறவா இசையேயென்கோ”

என்ன என்றுன்னைப் புகழ்வேன்! என்று அவளையிறுகத்தழுவி இவ்விருசிலம்பையும் முதலாகக்கொண்டு நேரே வியாபாரஞ்செய்து, தனார்ச்சனம்பண்ணி, இனியாயினும் நாமிருவரும் இன்புறக்கூடிவாழ்வோம்என்றும், நாம் தனிகராய்வாழ்ந்த இவ்வூரிலிருப்பது நமக்கு இழுக்கு, ஆதலால் பாண்டிநாட்டு ராஜதானியாகிய மதுராபுரிக்குப் போய்விடுவோம் என்று, என்றும் நடந்தறியாது, கொடிபோலும் நுண்ணிய இடையையுடையவள், மாந்தளிரையொத்த அடியளைக் கூட்டிச்சென்று மதுரையில் ஒரு இடைச்சி வீட்டில் மிக இளைத்த தன பத்தினியை விட்டுவைத்துத் தான் ஒருசதங்கையைவிற்றுவர கடைத்தெரு வழிச்சென்றான். அப்பொழுது ஒரு பெருத்த தட்டான் நேர்பட்டான். அவனுக்கு இதைக்காண்பித்து இதைவிற்றுக் கொடுக்க வேண்டுமென்று கோறிக்கொண்டான். அப்பொழுது தட்டான், “இது ராஜபத்தினிகளுக்கே தகுமன்றி சாமான்னியர் வாங்க இயலாது ஆதலால் அரசனுக்குக்காட்டி விலை செய்துகொடுப்பேன். நான் அரமனையிலிருந்து திரும்புமளவும்நீ இவ்விடத்திலிரு” வென்று சொல்லி அரமனையில் புகுந்தான்.

இதற்குச் சொற்பகாலத்துக்குமுந்திதான், இத்தட்டான், இராஜபத்தினியின் சதங்கையொன்றைத் திருடிவிட்டான். அத்திருட்டு இன்னம் கண்டுபிடிக்கப்படவில்லை. இதுதான் சமயம், இச்சதங்கை ராஜதிபத்னியது என்று கோவலன்பேரில் பழிசாற்றிவிடலாம், தன் குற்றம் தன்னைவிட்டுநீங்குமென்று துணிந்து அரசனிடம்சென்று, ராஜபத்தினியின் சதங்கையைத் திருடினவன் கையும் களவுமாயகப்பட்டானென்று கூறவே, அரசனுக்கு “வினைவிளைகாலமாதலின்” “கள்வனைக் கொல்லக் கொணர்மின்” என்றுசொல்ல நினைத்து வாய் தவறி “கள்வனைக்கொல்லுமின்” என்று கட்டளையிட்டுவிட்டான். தூதரும் உடனே கோவலன் தலையை வெட்டித் துணித்தார்கள்.

இதே சமயத்து இடைச்சி வீட்டிலிருந்த மகாபத்தினியாகிய கண்ணகிக்கு பற்பல துற்சகுனங்கள் நேரத்தலைப்பட்டன. இவைகளை நோக்குற்ற இவள் மகாஸதியாகையால், தன்

கணவனுக்கு ஏதோ துன்பம் நேர்ந்திருக்க வேண்டும் என்று உணர்ந்து, "இரும்பைக் கரந்தமிழுக்கின்றவாறு" கணவனிறந்து கிடந்த இடத்துக்குச் சென்றாள். கணவனிறந்து பட்டிருக்கின்றதைக் கண்டுமனம்பொருளாய் நியாயமென்பதைப் பகுத்தறியச் சமர்த்திலனான பாண்டியன்நாடு பாழாகட்டும் என்று அக்கினி பகவானுக்குக்கட்டளை யிட்டனள். நடுங்கி இவள் பின்னின்ற அக்னிபகவான் உடனே மதுராபுரியைச் சுட்டுப்பாழாக்கினான்.

குருடனான தன்பர்த்தா திருதிராஷ்டிரன் இனிய காட்சிகளைப் பார்க்கக்கொடுத்து வைக்கவில்லையே என இரங்கி, அவன்பத்தினி சிரோமணி, தன் கணவனுக்கில்லாத அதிகப்படி சௌகரியமாகிய காட்சி தனக்கும் வேண்டாம் என்று, அன்றுதொட்டு தன்னிரு கண்களையும், ஒரு சிறியவஸ்திரத்துண்டைக் கொண்டு, புதைத்துக்கட்டி, அந்தியகாலம் வரை அவைகளை யுபயோகிக்காது வாழ்ந்து வந்தாள். இதுவன்றோ 'நோவில்நோதல்' என்பது.

மேற்கூறிய கண்ணகி, தன் கணவனிறத்தலோடு தானும் அக்கினிப் பிரவேசம்செய்து தன்னுயிரை மாய்த்துக்கொண்டாள். இவ்வாறு அக்கினிப்பிரவேசம் செய்தோர் எண்ணிறந்தவர்கள். இன்றைக்குக் கொஞ்சம்காலத்துக்கு முந்திகூட இவ்வாறு சககமனஞ் செய்வது நடப்பிலிருந்தது. கணவனுடன்வாழாவாழ்க்கைபாழ் என்று திரிகரணசுத்தியாய் சககமனஞ்செய்வதில் கெடுதி யொன்றுமில்லை. முதன்முதல் இவ்வித வாடிக்கை பிரிவாற்றா மனைவியரால் நாட்டப்பட்டது. பிற்காலங்களில் இது ஒரு கட்டாயம்போல ஏற்பட்டுவிட்டது. இஷ்டமிருப்பினும் இல்லாதிருப்பினும், கணவனையிழக்கப்பெற்றாளையும் கணவனுடன் கட்டையிலேற்றிக்கொளுத்திவிடுவதுதான் வழக்கம் என்று பழக்கமுண்டாயிற்று. இக்கொடுமையான வாடிக்கையை நம் ஆங்கில துரைத்தனத்தார் கருணைகூர்ந்து நிறுத்திவிட்டனர். 'சாவிற்சாதல்' என்னலாம்படியான அவ்வளவு பலத்த அன்பில்லாத மனைவியர்கட்கு இது சௌகரியத்தை விளைத்தது. கொண்டானிறந்ததும் ஒருகணமேனும் அவனைவிட்டுப் பிரிய இணங்காத் தன்மையுடைய வலிய அன்பையுடைய மனைவியர்கள் விஷயத்தில் துரைத்தனத்தார் சட்டமும், மற்றைப்பேர்ப்பட்ட இடையூறுகளும் ஒரு பயனும்படாது. மனம் வெறுத்தவர்களை எத்தனையும் நாம் பாதுகாத்து வந்தபோதிலும், என்றேனும் ஒருதினம் அவர்கள் தம்மெண்ணத்தை நிறைவேற்றியே தீர்வார்கள். இங்ஙனம் சாவிற்சாதலுக்கு ஒன்றிரண்டு உதாரணம் காட்டுவோம்.

நீலகிரியில் மைசூர் மகாராஜாவின் அரண்மனை விசாரிப்புக்காக ஒரு உத்தியோகஸ்தர் நியமிக்கப்பட்டு, அவரும் அவர் பத்தினியாரும் மட்டுமே, அக்கட்டிடத்தில் வாழ்ந்து வருநாளில் ஏதோ சிலநாள் அசௌக்கியத்தால் கணவனார் இறந்துபோனார். முதல்நாள் கிருத்தியங்கள் முடித்துவிட்டுவந்த மனைவியார், தம் கணவனின்றும் பிரிந்த சங்கடம் ஆற்றாராய், ஒரு கொடுவாளைக்கொண்டு தம் கழுத்தை யரிந்துகொண்டு மாய்ந்தார்.

செஞ்சிக்கோட்டைக்குகவர்னராயிருந்த ராஜாதேசிங்கு என்பவர் பெயரைக்கேளாதவர் தமிழ்நாட்டில் ஒருவருமிரார். இவருக்கு நேர்ந்தசாவும்பலர் "தேசிங்குராஜன்கதையால்" அறிந்தவிஷயம். இவரைப் போர்க்களத்தில் கொன்று வெற்றியடைந்த துருஷ்க அதிபதி, இவர் மனையாள், தன் கணவனிறந்ததுபற்றி அக்கினிப்பிரவேசம் செய்யப்போவதைக் கேள்வியுற்று, அந்தப் பெண்மணியிடம், பலவாற்றானும் அங்ஙனம் செய்வதைத் தவிர்க்கவேண்டுமென்று மன்றாடியும், உயிரில்லாது உடம்பு தரிக்காது, என்பதைப்போல, தன் மன்னனையிழந்த இந்தமாது, அன்றே

தீப்புகுந்து மாய்ந்தாள். இம்மகாஸதி பேரால் துருஷ்க அதிபதி செஞ்சியில் "தீப்பாய்ந்தாள் கோயில்" என்றோர் கோயில்கட்டுவித்து பூஜைமுதலியவற்றிற்கும் ஏற்பாடு செய்தான். இவ்விராணிபெயரால் ஒரு பட்டணமும் பிரதிஷ்டிப்பித்து அதற்கு "இராணிப்பேட்டை" என்றுபெயரும் இடுவித்தான்.

"இவையெல்லாம் புராணகதைகள்: ஒருண்மையை வெளியிடக்கருதி கட்டினகதைகளாம்: இக்காலத்தில் யாமறிய தன் நடத்தை குணம் முதலியவற்றால் தன் கணவன் அன்பைக்கவர்ந்தகாதலியர் கதையைச்சொல்லின் அன்றோ உண்மைவிளங்கும்" என்பார்க்கு, எமக்குத்தெரிந்த ஒன்றிரண்டு உண்மைக்கதைகளைச் சொல்வோம்.

(இன்னும் வரும்.)

தி. அ. கோபிநாதராவ்.



## 'BRIDEGROOM—HUNTING' OR, THE LOST IDEAL.

## "மாப்பிள்ளைதேடல்"

அல்லது

## காணாமற்போன கட்டழகன்.

(ஸ்ரீஸத்யானந்த சாந்தசர்மா எழுதியது.)

### III. கட்டழகன் குணம்.

"கண்ணுட்பாவைபோல் கருத்துட்கலந்து நிற்பான் கட்டழகன்."

"கருக்கலந்தபோதே கண்டிருந்தகாரணா, உருக்கலந்தபோதலோ உன்னை யானறிந்ததனன்" என்றார், "கொக்கென்று நினைத்தையோ கொங்கணவா" என்ற கற்புக்கரசியின் கட்டழகனும் கணவர். சாவித்திரிமுதலான பதிவிருதா சிரோமணிகள் தத்தமக்குரிய கட்டழகனைக் கண்டுபிடித்தவிதமும் அதுவே. "உஷாஸ்வப்னம்" என்ற ரவிவர்மா தீட்டிய படத்தை இதை வாசிப்போர் பெரும்பாலாரும் பார்த்திருப்பாரென்றேயெண்ணுகிறோம். பாராதவர்களும் பாணாசுரன்மகளான உஷை தன் கணவனைக்கண்டுபிடித்துக் கூடிய கதையைப் படித்திருப்பார்களென்பது நிச்சயம். உஷாகுமாரத்தி பக்குவம் வந்தபின் தன்னை மணக்கும் கண்ணாளனும் கட்டழகன் எங்கேயிருக்கிறான்? அவன் எப்போ வருவான்? அவனை யான் எப்படித்தேடிப்பிடிப்பேன்? அவனாகவல்லவோ என்னைத்தேடிவரல்வேண்டும்! எப்போ வருவாரோ என்நாதர்? என்று அல்லும் பகலும் அதே எண்ணமாகவிருந்து அந்த எண்ணத்தில் ஈடுபட்டவளாய் உறங்கிப்போக, அவள் மனக்கண்முன் பூர்வஜன்ம ஸம்ஸ்காரத்தால் அவளை மணக்கப்பிறந்த புருஷன் பிரத்தியக்ஷமாகி அவள் சிந்தையுட் புகுந்து யாருமறியாது அவள் உள்ளத்தே குடிப்புகுந்தான். உள்ளம் புகுந்தானைபுவகையுடன் தானேற்றுக், கள்ளம் கபடின்றிக் கண்ணகத்தே யவன் உருப்படிய, உள்ளம் புழுங்கி யவன் இருப்பிடத்தைத்தேடலுற்றாள். கண்ணுட்பாவைபோல்கருத்துட்கலந்து நின்ற கட்டழகன் திருவுருவத்தை மனத்திலிருந்து படத்திலெழுதி அதைப்போலுருவமைந்தான் உலகத்தே யெங்குள்ளான் என்று தேடலுற்றாள். அவன் உருவத்தைப்போல் உருவேற்கவல்லார் உலகத்தே பலரிருப்பினும், அவனுள்ளத்தைப்போலுள்ளத்தார்உலகில் அவனையன்றி வேறில்லையாவர். "உலகில்" என்றால் திரிலோகத்திலும் என்று பொருள் கொள்ளல்வேண்டும். ஏனெனில் தமயந்தி ஸ்வயம்வரகாலத்தில், இந்திரன் முதலான தேவதைகளும் அவள் கரம்பற்றக் காதலுற்று நளனைப்போலுருவந்தரித்து நளனோடு நளனை ஸ்வயம்வரமண்டபத்தில் வீற்றிருப்பினும், அவளை ஏமாற்ற முடியாமற் போயிற்றல்லவோ! ஏன்? பொறிபுலனறிவை மட்டும் அவள் நம்பியிருந்தால் கட்டாயம் மோசம் போயிருப்பள். "கருக்கலந்தபோதே"

யுருக்கலந்து நிற்பதற்குக்காரணம் அன்பொன்றல்லாமல் வேறென்று காரணமில்லை. அன்பு காரணமாய் "கண்ணுட்பாவைபோல் கருத்துட்கலந்து நிற்பான் கட்டழகு" காமுகர்க்கு வாய்ப்பது துர்லபம். காமுகர் தேஹேந்திரியங்களைத் துளைத்துக்கொண்டு புகுந்துவிட்டாலும் விடலாம். ஆனால் ஹிருதயத்துட் புகுந்து கருத்துட் கலக்க உள்ளன்பன்றி யுண்மையில் வேறோர் வழியின்மையால் அவர்கள் அழகெல்லாம் அன்பு நிறைந்து அபல்நினைவற்ற பதிவிரதாசிகாமணியின் உள்ளம் புகுந்து கள்ளம் கபடற்றுநின்றான் கட்டழகுக்கு ஈடாகாது. ஆகையால்தான் அவனைக் "கட்டழகன்" என்று கூறியது. "இலக்கியங் கண்டதற் கிலக்கணங்கூறுதல்" அமையுமேயன்றி இலக்ஷியத்திற் சாக்ஷாத்கரிக்கப்படாத ஒன்றுக்கு இலக்ஷணங் கூறுதல் சிறிதும் அமையாது. ஆகையால்தான் ஸ்திரீகளுக்கு ஸ்வயம்வரம் ஏற்பட்டது. புருஷன் போகம் புசிப்பானதலால் காமவசத்தனை பொழுது கண்ணுக்கிசைந்த கன்னிகைகளை பலாத்காரமாய்க் கொண்டுபோய் அநுபவிப்பானானன். ஆனால் உத்தமகுலத்திற் பிறந்த கன்னிகைகளோ அவர்கள்உள்ளம் புகுந்தானன்றி மற்றவர்கள் துய்க்கப் பெறாதவர்களானதால், அவர்களுக்கு ஸ்வயம்வரம் ஏற்பட்டது. "கருக்கலந்தபோதே கண்டிருந்தகாரணனை" "உருக்கலந்தபோது" கண்டுபிடித்தலே ஸ்வயம்வரத்தின் நோக்கமாம். அதற்கு வழிவகைகள் அனந்தம். "உளக்கண்பெற்றார்க்கு முகக்கண் காணாது" என்பதுபழமொழி. அப்படியென்றால், உலகத்திலே அகக்கண் பார்வைபெற்றவர்கள் முகக்கண்ணால் பார்க்காது அகக்கண்ணாலேயேபார்த்துணர்வார் என்பதுபொருள்.

"முகத்திற் கண்கொண்டு பார்க்கின்றமூடர்காள்
அகத்திற்கண்கொண்டு பார்ப்பதேயானந்தம்"

என்றார் திருமந்திரம் ஓதிய திருமூலதேவரும். ஆகையால் அகக்கண்பார்வை பெற்ற (என்றால், ஆத்மவுணர்ச்சியுண்டாய், ஆத்மானந்தத்தில் லக்ஷியம் பதிந்துள்ள—என்பது பொருள்) உத்தமகன்னியர்களுக்கு முகக்கண் பார்வை மோகம் விளைக்காததலால், அவர்கள் "கண்ணுட்பாவைபோல் கருத்துட்கலந்துநிற்பான் கட்டழகனும்" தம்கணவரைத் தாமே தெரிந்தெடுத்துக்கொள்ளத் தகைமையும் உரிமையும் பெற்றவர்கள் என்பதுபற்றி அவர்களுக்கு ஸ்வயம்வரம்ஏற்பட்டது. அவர்கள் காமம்,கேவலம்பொறிபுலனறிவால்தூண்டப் பெற்றதாயின்றி, சுத்த சத்துவமான உள்ளறிவாம் ஆத்ம புத்தியால் தூண்டப் பெற்றதா யிருப்பதால் அது காமவிகாரமாயின்றி உள்ளன்பென்னும் உயர் காமமா யிருக்கிறது. நிர்விகாரமான காமமே உண்மையான உள்ளன்பு. உள்ளன்பின் மலினவிகாரத்தோற்றமே அசுத்தமான 'ஆசைநோய்' என்னும் காமவிகாரம். இதற்கும் அதற்கும் வெகுதூரம். ஆனால் இரண்டும் ஒன்றின் பரிணாமமாய்ப்பிரிந்து வளர்ந்தனவன்றி உண்மையாக வேறுவேறல்ல. உள்ளன்பான உயர்காமம் மோக்ஷவழியைக்காட்டுவதாய்மேன்மேலும்ஊர்த்துவமுகமாகச் செல்லச்செய்யும். கள்ளப்புலன்களின் கலவியால்வரும்களவியற்காமம்பெந்தவழியிற்செலுத்திமேன்மேலும்அதோமுகமாக(கீழ்நோக்கிச்)செல்லச்செய்யும். ஆகையால் விவாகத்தை ஆத்ம ஸம்ஸ்காரமாக அநுஷ்டிப்பவர்கள் பூர்வஜன்மஸம்ஸ்கார விசேஷத்தால் "பிரிந்தவர்கூடினாற் பேசல்வேண்டுமோ!" என்றபடி; உள்ளன்பின் வசப்பட்டவராய் ஊசியைக்காந்தமிழுக்கின்றவாறு உள்ளன்பு வசப்பட்ட மனத்தினராய், மனக்கண்கண்டதற்கிசைந்து நடக்கும் தேஹத்தினராய் (இந்திரியக்கூட்டமே தேஹம்), அடக்கமும் ஒடுக்கமும் சாந்தமுமுள்ளவர்களா யிருப்பார்கள். அவர்களை பலவந்தப்படுத்த யாராலும் முடியாது. உண்மை வழிப்பட் டொழுகுகிறவர்களுக்கு நேரிடுந் துன்பங்களெல்லாம் அவர்களை அவ்வழியில் ஸ்திரப்படுத்துமேயன்றி அவர்கள் நல்வழியென்றுநம்பியதினின்றும்பிறழ்ந்து நடக்கும்

படி அவர்களைச் செய்யவல்லனவாகாது. அரிச்சந்திரன், சந்திரமதி, தமயந்தி, சீதை, சாவித்திரி யிவர்கள்சரித்திரமெல்லாம் இதற்குச்சான்றும். வாய்மையாலறம் தூய்மைப்பட்டு அறவழிநடப்பான் ஒருவழிப்பட்டாரை யாவராலும் திருப்பமுடியாது. ஏனென்றால் "சித்தன்போக்கு சிவன்போக்கு" என்றபடி அவர்கள் ஈசுவரனை வழிபட்டு நடப்பவர்கள். "ஸத்யம்வத, தர்மம்சர" என்ற வேத வாக்கியத்துக்கிணங்க மனிதன் உண்மையுரைத்து வாய்மையால் அறம்தூய்மையாகவும், அறஞ்செய மறம் தீரவும் தன் ஸ்வஸ்வரூபத்தைக் காணவல்லவனாகி யிருக்கிறான். தர்மம் தழைத்தாலன்றிக் கர்மம் தொலையாது. தருமவிருக்ஷம் எப்படிப்பட்டதென்றால் அது கருத்தரித்தார்க்கு (மனதையடக்கினார்க்கு) க்கற்பகவிருக்ஷம்போல், உருத்தரித்தார்க்கு உண்மைச்சம்பத்தை யளிப்பதாம். அது வியாஸதாஸரான க்ஷேமேந்திரர் சொல்வதுபோல், "கருணையாகிய அமிருதத்தால் நனைந்து வளர்க்கப்படுவதாயும், நற்புத்தியாகிய கொடியால் அலங்காரம் பெறுவதாயும் இருக்கிறது." அந்த "தருமமாகிய விருக்ஷத்தின் அடிமரம் உண்மையுடைமை, நிழல் பொறுமை, வேர் நன்னடக்கை, பூவரும்புள்ள தளிர் மனமொழிமெய்களில்சுத்தமுடைமை(இதுதான் பிரஹ்மசரியமும்), புஷ்பம்க்ஷேமம், பழம் சம்பத்து, இப்படியுள்ள தருமவிருக்ஷம் சாதுக்களுக்கு மங்களத்தையுண்டாக்குக.'' என்று க்ஷேமேந்திர யோகீந்திரர் ஆசீர்வதித்திருக்கிறார்.

தர்மவிருக்ஷத்திற்குக் கொடியெப்படியோ அப்படி தர்மசிந்தையுள்ள தீரனுக்கு நற்புத்தியுடைய பெண்கொடிபாரியாளாகஅமைவது. தருமவிருக்ஷம் கருணையாகிய அமிர்தத்தால் நனைந்து வளர்க்கப்படுவதுபோல, புருஷனுடைய ஸ்திரபுத்தியினுதிக்கும் தர்மசிந்தையும் மனையாளின் அன்பு என்கிற கருணாரஸம் கசிந்து பொழிய அதில் நனைந்து செழிப்பாய் வளரும். மரத்துக்கு மூலம் உண்மையுடைமையாக இருப்பது போல், புருஷனுடைய தீரத்துக்கும் ஸ்திரபுத்திக்கும் மூலம் அவனுடைய ஸத்ய விருதமாம். அப்படிப்பட்ட மரத்துக்கு நிழல் பொறுமைஸ்வரூபமாக விருப்பதுபோல், ஸத்யவிருதனான தீரபுருஷனுக்கு நிழலைப்போல் அவனைவிட்டுப் பிரியாத தர்மபத்நி சாந்தஸ்வரூபமாயிருந்து அவனுடைய ஸத்யவிருதத்தினால் அவனுக்குவரும் இடையூறுகளை யெல்லாம் சாவித்திரியைப்போல் சாந்தப்படுத்தி விதியையும் வெல்லுவள். "பொறுத்தார் பூமியாள்வார்:" ஆதலால் பொறுமையின் சக்திக்குக் குறைவு ஒருநாளுமில்லை. அப்படியே ஸத்யத்தின் ஒளி மங்குவதுமில்லை. புருஷன் ஸத்யவானாகவிருந்தால் அவனுக்குப்பாரியையாக வந்து லபிப்பவள் சாவித்திரியாகவே யிருப்பாள். இதில் சந்தேகமில்லை. தம்பதிகள் பூர்வஜன்மத்தில் தருமவழியிலிருந்துழைத்திருந்தாலன்றி புனர்ஜன்மத்தில் பொருந்திவாழார்கள். பூர்வஜன்ம புண்யமுண்டேல் அநுகூல தாம்பத்தியம் தானாகவே வந்து சித்திக்கும்.

"இன்சொல்விளைநிலனாவீதலேவித்தாக
வன்சொற்களைகட்டுவாய்மையொருவட்டி
அன்புநீர்ப்பாய்ச்சியறக்கதிரீனவோர்
பைங்கூழ்சிறுகாலைச்செய்."

என்ற அறநெறிச்சாரத்துக்கிணங்க, முகமலர்ச்சியோடு கூடிய இனிமையான சொல்லை விளைநிலமாக்கவேண்டும். முகமலர்ச்சியேனென்றால் "அடுத்தது காட்டும் பளிங்கே போல் நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்" ஆதலால் வாய்நயம்போல் அகத்திலும் நயமிருக்கவேண்டும். வாயிலொன்றும் வயிற்றிலொன்றுமாகப் பேசுகிறவர்கள் மோசக்காரர்களாதலால் அவர்களால் அறப்பயிர் சிதைவுறுமன்றிச் செழிக்காது.

"மனஸ்யேகம், வசஸ்யேகம், கர்மண்யேகம் மஹாத்மனாம்; மனஸ்யந்யத், வசஸ்யந்யத், கர்மண்யந்யத் துராத்மனாம்."

மனமொழி மெய்களில் அதாவது மனஸ், வாக்கு, காரியம் இவைகளில் ஒரே மாதிரியாக விருப்பவர் மஹாத்மனவர். இவற்றில் ஒவ்வொன்றும் வெவ்வேறுபட்டு நிற்பவர் சந்தேகமின்றி துராத்மனேயாம். துராத்மாவால் தர்மம் தழைக்காது. பாபமே விர்த்தியாகும்.

"ஈதலேவித்தாக" வென்றால்தன்னைக்கொடுத்தலேவித்தாம். அதாவது "நான்" "எனது" என்னும் எண்ணம் அறவற்று புறப்பற்றுகளை விடுதலே தர்மவித்தாம். ஆகையால்தான் "ஈதல் அறம்" என்றார் ஔவையாரும்.

"வன்சொற்களைகட்டு"—கடுமையான சொல்கள் அன்பிலா உள்ளத்தைக் காட்டுவதால் அதைக் களையவேண்டும். அப்படியென்றால், அன்பிலா வார்த்தை அறப்பயிர் அழிக்கும். அன்பிலாவுள்ளம் அமிர்தத்தையும் விஷமாக்கும். அன்பிலாளிட்ட அமுதமும் நஞ்சேயாகும்.

"ஒப்போடுமுகமலர்ந்தேயுபசரித்துண்மைபேசி
உப்பிலாக்கூழிட்டாலுமுண்பதேயமிர்தமாகும்
முப்பழமோடுபாலன்னம்முகங்கடுத்திடுவாராகிற்
கப்பியபசியும்போக்கிக்கடும்பசியாகுந்தானே."

என்பது விவேகசிந்தாமணி வாக்கு. ஆகையால் "வன்சொல்," வாயில்மட்டுமல்ல, அகத்திலும் முகத்திலும் இல்லா திருக்கவேண்டும். வாயிலொன்று வயிற்றிலொன்றாகவிருக்கின், வாய் தேனொழுகப் பேசினும் அந்தவார்த்தைகளின் சப்தமும் அதனுள்ளிருக்கும் நாதமும் காதில் நாராச மூற்றியதுபோல் கர்ணகடூரத்தை யுண்டுபண்ணும் சாதுக்களுக்கு. ஆகையால்அன்பிலாமையே கூடாது: அதைக்களை பிடுங்குவதுபோல் பிடுங்கி யெறிந்து விடவேண்டும்.

"வாய்மை பெருவட்டி"—ஸத்யத்துக்கு மிஞ்சின சாதனமில்லையால், ஸத்யவிருதமே எல்லாவற்றிலும் மேல்.

ஆயிரம் அஸ்வமேதயாகத்திலும் ஸத்யமே மேலானது என்று மஹாபாரதத்தில் சொல்லியிருக்கிறது. ஸ்ரீ இராமாயணத்திலும் ஸத்யமே எல்லாவற்றிற்கும் மூலாதாரமா யிருக்கிறது என்று சொல்லியிருக்கிறது.

'ஸத்யமேவேச்வரோலோகேஸத்யம்பத்மாஸ்ரிதா ஸதா
ஸத்யமூலானிஸர்வாணிஸத்யான்னாஸ்திபரம்பதம்.'"

இந்த உலகத்தில் ஸத்யமே (ஈஸ்வர:) தெய்வம்; சம்பத்துக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பது ஸத்யமே. எல்லாம் ஸத்யத்தை மூலாதாரமாகக் கொண்டிருக்கிறது. ஸத்யத்தை விட மேலான பதம் கிடையாது. ஆகையால் தர்மம் தழைக்க வேண்டுமானால் "வாய்மை பெரு" அடிக்கவேண்டும். நீரில்லாமரம் வாடுமாதலால், "அன்புநீர்பாய்ச்சி"—என்றார். நீர் மரத்துக்கு எப்படி ஆதாரபூதமாக விருக்கிறதோ அப்படி அன்பு அறத்துக்கு ஆதாரமாயிருக்கிறது. அன்பில்லாவிடத்து அறமும் இல்லை. ஆதலால் தன்னைக் கொடுத்துச்செய்யும் சதிபதி தர்மங்களால் "அறக்கதிர்" எனும் தர்மமாகிய பலன்கிடைக்கும். இந்த தருமவியவசாயத்தை இளவயதிலே செய்யத் தொடங்கல் வேண்டும்.

" யுவைவதர்மசீலஸ்யாத் அநித்யம்கலு ஜீவிதம்."

ஆயுஸ்அநித்யமாகையால் இளம்பருவத்திலே தர்ம சீலத்தைப் பெறமுயலவேண்டும் என்று ஐந்தாம் வேதமாம் மஹாபாரதம் ஓதுகின்றது.

ஆதலால் தர்மசீலத்தையடைய இளவயதில் முயலவேண்டும். இந்த தரும வியவசாயம் ஒரு ஜன்மத்தில் செய்தாவதில்லை. ஜன்மஜன்மமாகச்செய்துவந்தால் பலஜன்மங்களில் முதிர்ந்து முக்தியென்னும் பலனைத்தரும்.

நன்னெறிபற்றி நடக்க உயிர்த்துணையாக அமையும் தம்பதிகள் கருத்தொத்து நடக்கவேண்டியிருத்தலால் கன்னிகையின் காம்பற்றி நல்லறமாம் இல்லறம் நடத்தப்புகும் புருஷன் ஸம்ஸாரத்துக் கின்றியமையாத ஸுக துக்கங்களைத் தன்னலங் கெடாது

அனுபவிக்கும் ஆற்றலுடைய உத்தமகுணமுள்ளவனாயிருக்கவேண்டும் என்னவே, இல்லறம் புகுவான் இயற்கையில் நற்குணம் வாய்ந்தவனாகவிருக்கவேண்டும். அப்பொழுதுதான் அவனிடத்தில் உத்தமர்க்குரிய லக்ஷணமாம் "நலிந்தாலும் நற்குணமே தோன்றும் நயந்து" என்கிற நற்குணம் விளங்கும்.

"பொன்னுங் கரும்பும் புகழ்பாலுஞ் சந்தனமும்
சின்னம்பட வருத்தஞ்செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து."

[பொன்னையும் கரும்பையும் பாலையும் சந்தனத்தையும் பொடிப்பொடியாகச் சிதைவுசெய்தாலும் அவற்றின் ஸ்வபாவம் சிறிதேனும் குறையாது ; அதுபோல, உத்தமர்கள் எவ்விதமான துன்பம் வந்தகாலத்திலும் தங்களுடைய ஒழுக்கத்திலிருந்து அணுவளவாயினும் தவரமாட்டார்கள்.]

உத்தமர்கள் (ஸ்வபாவமாக நற்குணம் வாய்ந்தவர்கள்) ஸம்ஸாரத்தில் தாபத்திரயங்களால் வருந்தினவிடத்தும் தீயிலிட்ட ஸ்வர்ணம்போல் தம் நற்குணமே மேலாகப் பிரகாசிக்க விளங்குவர். ஆகையால் இவன் வாய்மை, பொறுமை, ஈகை, தருமம் முதலிய நற்குணங்கள் வாய்ந்தவனாக விருப்பதன்றி பழிபாவங்களுக்கெல்லாம் காரணமான காமத்தை நஞ்செனவெறுத்து ஏகபத்நீ விருதம் பூண்டவனாயிருப்பான்.

"அறம்புகழ்கேண்மை பெருமை யிந்நான்கும்
பிறன்தாரம் நச்சுவார்ச்சேரா—பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும்பகை பழிபாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள்".

இல்லறஞானியாம் திருவள்ளுவரும்,

"பகைபாவ மச்சம் பழியென நான்கும்,
இகவாவா மில்லறப்பான் கண்."

என்று சொல்லியிருக்கிறார். பொய், களவு, காமம் என்கிற அகத்துள் தீமையையும், கள், காமம், கொலையென்கிற புறத்துள் தீமையையும் ஒழித்து ஸத்தியசந்தனாக ஒழுகுபவன் எவனோ அவனே சுத்த சத்துவனாந்தன்மைபொருந்தி விளங்குவதால் "கட்டழகன்" ஆவான். தூயமனமுடைத்தல்விய கன்னியர் தம் காதல்நிறை யுள்ளத்தைக் கவரும் "கள்வன்" அவனே யாவான். இந்தக்கள்வனைத் தடுக்கக் கபாடமும், காவலும்கட்டும் பிரயோஜனப்படாவாம். இவன் வரும்வழியடைக்கத் தாப்பாளுமில்லை. அறவழிப்பட்டு அன்புடையோனாதலால் மறவழி நுழைந்து மாச்சரியம் பூணான். இழிகாமம் இவனைக்கண்டால் எடுத்துவிடும் ஓட்டம். ஏனெனில் இவன் விவேக புருஷனாதலால்,

காமமே குலத்தினையும் நலத்தினையும் கெடுக்க
[வந்தகளம்
காமமே தரித்திரங்களனைத்தினையும் புகட்டிவைக்
[குங்கடாரம்
காமமே பரகதிக்குச் செல்லாமல் வழியடைக்கும்
[கபாடம்
காமமே யனைவரையும் பகையாக்கிக் கழுத்தரியும்
[கத்தியாம்,

என்ற விவேகசிந்தாமணிவாக்கிய உண்மையை இவன் நன்கறிவான். காமம் என்றாலும் துராசையென்றாலும் ஒன்றே- "துராசைக்கிடங்கொடான் நிராசைவழியில் நிற்பன்" என்பது அனுபவவாக்கு. ஆசையனுபவிக்கத்தீரும். துராசையோ அனுபவிக்க அனுபவிக்க அதிகமாய்வளரும். ஆகையால் துராசையை நீக்கி நல்லாசைவைத்துநயந்துணரத்தக்காரே "இல்லறமல்லது நல்லறமன்று" என்றிருப்பதால் அறவழிப்பட்டுஆசையை யனுபவித்துத் தீர்க்க இல்லறம் நடாத்தப் புகுவார். அவரைச்சாதுக்களும் சத்புருஷரும் வழிநோக்கி யெதிர்பார்த்தவண்ணமிருப்பர். அவர்வரவையுன்னி அமர்ந்திருக்கப் பொறுக்காதார் அவர் இருப்பிடந் தேடியலைந்தும் திரிவார். ஏனெனில் அவர்கள் தர்மந் தழைக்கவென்று தனைத்தேடிவந்தாரை ஒருக்காலும் உதாசீனம் செய்துஉதறியெறியார். பிறவிஞானியாம்திருவள்ளுவரும் இல்லறம்புக இதனால்தானே இசைந்தாரல்லவோ.

---

## THE HOLY CITY OF MUTTRA.

## வடமதுரை.

## II

பவுத்தமதம்:—பிறகு ஜராசந்தனுடைய வம்சத்திலுதித்த சஹாதேவன் புத்தமதத்தை தழுவி இம்மதுரையில் அம்மதகோவில்களையும் மடங்களையும்கட்டி பௌத்தமதஸ்தர்களுக்கு பிரதான பட்டணமாக்கினான்.

இக்காலத்தில் இவ்விடத்தில் இருபது பிரமாண்டமான புத்த ஆச்ரமங்களும் மூவாயிரம் பவுத்த சந்நியாசிகளும், ஆறு உயர்ந்த கோபுரத்தோடுகூடிய கட்டடங்களுமிருந்ததாக சரித்திரக்காரர்கள் எழுதியிருக்கிறார்கள்.

பிறகு கோவர்த்தனன் என்றகாஸ்மீரதேசத்து ராஜனும் அவன் குமாரனும் இந்த பவுத்த மதத்தைத் தொலைக்கப் பல பாடுபட்டதாகவும், ஜெயபிதாமகராஜன் என்பவன் கடைசியாக இம்மதுராபுரியில் ஜெயப்பூர் ராஜ்ஜியத்தை ஸ்தாபித்து ஓர் மகாதேவர் கோவிலைக்கட்டினாரென்பதாகவும் தெரியவருகிறது.

மகமதியரால் பாழாக்கப்பட்டது:—இதன் பிறகுதான் கஜநி மகமதென்பவனும் இம்மதுரையைத்தாக்கிஜனங்களைக்கொன்றுபொருளைகொள்ளையடிக்க, குலசந்திரன் என்றராஜன் துருக்கருடையபழிபாவங்களுக்கஞ்சாத செய்கைகளைக் கண்டு வெறுப்படைந்து தன் மனைவிகளைக்கொன்று தானும்குத்திக்கொண்டிறந்துபோக மகமது கஜ்நி ஆயிரக்கணக்கான இந்துக்களுடைய கோவில்களையிடித்து, விக்கிரகங்களையுடைத்து, கோடிக்கணக்கான திரவியத்தைக் கொள்ளைகொண்டு போனான். பிறகு ஆக்பர் ஆளுகைக்கு இம்மதுராபுரிவருகிறவரையில் இது பலமகமதியர்களுடைய ஆளுகைக்குட்பட்டு குரங்கின் கையிலகப்பட்ட பூமாலைபோல் அல்லோல கல்லோலப்பட்டுவந்தது.

சுல்தான் சிகந்தர்லோடி என்றமகம்மதியஅரசன் ஒரு தடவை மதுராபுரியிலிருந்த கோயில்களையிடித்தான். இவன் தான் இந்துக்கள்க்ஷவரம்செய்துகொள்ளக்கூடாதென்றும் தாடிகளை வைத்துக்கொள்ளவேண்டுமென்றும் உத்தரவு பிறப்பித்த தர்மப்பிரபு.

அப்கன் அன்னபி என்ற சிற்றரசன் மதுராபுரியை யாண்டபொழுது கம்சனுடைய கோட்டைக்குள் ஸ்ரீ கிருஷ்ணர் ஜனித்தவிடத்திலிருந்த அரண்மனையையிடித்து ஒரு மஜீதைக்கட்டி அடுத்தவிடங்களை கசாப்புக்கடைகளாக்கினான் ஆக்பருக்குப்பிறகு சக்ரவர்த்தியாக விருந்த ஷாஜிஹானுக்கும் ஒரு தடவை மதுராபுரியிலிருந்தஇந்துதேவாலயங்களையிடிக்கும்படி கட்டளையிட்டு இஸ்லாமாபாத்து என்று பெயரிட்டான்.

1658-ம் வருஷத்தில் அவுரங்கசீப் காலத்தில் ஆப்துல் அன்னபி என்ற சிற்றரசன் இப்பொழுது நகரமத்தியில் விளங்கும் ஜிம்மாமசீதை கட்டினதாகத் தெரியவருகிறது. இவன் காலத்தில் யாதவகுலத்தவனான கோகுலராஜன் ஒருவன் தோன்றி மகமதியர்களையெதிர்த்து சண்டைசெய்து பலரைக்கொன்றபடியால் ஆப்துல் அன்னபியைக் கொன்றதற்குக்காரணம் இவனேயென்று சந்தேகங்கொண்டு இவனைப்பிடித்துக் கொண்டுபோய் ஆக்ராவில் கொன்றுவிட்டார்கள்.

அடுத்த வருஷம் ரமேஜான் பண்டிகையில் அவுரங்கசீப் நேராக மதுராபுரிக்குவந்து பந்தலாதேசத்து பிர்சிங்குதேவர், ஜியாங்கிர் காலத்தில் 40 லக்ஷம் ரூபாய் செலவிட்டு கட்டியகேசவதேவர் கோவிலையிடித்து பாழாக்கி அங்கிருந்த விக்கிரகங்களை ஆக்ராவிற்கு கொண்டுபோய் ஒரு மஜீதுக்கு படிக்கட்டுகளாக போட்டதாக தெரியவருகிறது. இவன் இறந்துபோக மறுபடியும் யாதவர் வசமாயிற்று இந்த மதுரை.

1712-ம்வருஷத்தில் மதனசிங்தாகூர் என்ற அரசன் இம்மதுரையில் பலபெரிய மாளிகைகளையும் ஆயைங்களையும் கட்டிவைத்துகுளங்களையும் வெட்டியதாகத தெரியவருகிறது. இவன் கட்டியமாளிகை யொன்றில் இப்பொழுதும் தாசில்தார் கச்சேரி வைக்கப்படுகிறது.

இதன்பிறகு இம்மதுரை ஒருதடவை சிந்திய அரசர்கள் வசப்பட்டு மிருந்ததாகத் தெரியவருகிறது. கடைசியாக 1803 ம் வருஷம் இது அங்கிலேயர் வசப்பட்டு சேனைகள் தங்க ஒரு கன்டோன்மெண்டு கட்டப்பட்டது.

1858-ம் வருஷத்தில் நடந்த கலகத்திலும் இம்மதுராபுரியில் சில சல்லியங்கள் நேரிட்டதுண்டு.

இபபொழுது இது வடமேற்கு மாகாணத்தைச் சார்ந்த ஆக்ராபிரிவில் ஒரு ஜில்லாவாக விருக்கிறது. இதற்கு ஆறு தாலுக்காக்கள் உண்டு. மூன்று யமுனையாற்றின் வலது புறத்திலும் மூன்று இடது புறத்திலு மிருக்கின்றன.

இப்பட்டணத்தின் கிழக்குபாகம் அதிக சௌக்கிய முள்ளதாயிருப்பதால் அதிக செழிப்புள்ளதாகக் காணப்படுகிறது. மேற்கு பாகம் அவ்வளவு செழிப்புள்ளதாகக்காணப்படவில்லை. ஆனாலும் புராதனமான பல கட்டடங்களையுடையதா யிருக்கிறபடியால் பார்க்கத்தகுந்ததே. கோதுமை, எவம், துவரை, கடலை, பருத்திமுதலியவைகள் ஏராளமாய் சாகுபடி செய்யப்படுகின்றன. அன்றியும் வெள்ளரி, புடலை, அவரை, பாவக்காய் முதலிய காய்களும், கொய்யா, மா, எலந்தைமுதலிய பழங்களும் மிகவும் சகாயமாய் விற்கின்றன.

ஜனங்கள் கூடியவரையில் சாந்தகுணமுள்ளவர்களாயும், விஷ்ணுபக்தி யுள்ளவர்களாயும், அதிக புஷ்டியும் காத்திரமுமான வனுத்த தேகமுடையவர்களாயும் காணப்படுகிறார்கள். என்ன காரணத்தினாலோ-குஷ்டம், யானைக்கால் முதலிய பெருவியாதியினால் வருந்துகின்றவர்கள் பலர்தோற்றப் படுகிறார்கள். இவ்விடத்தில் ஹிந்தி என்ற பாஷை பேசப் படுகிறது. பிராமணர்கள், பனியர்கள், தாகூர்கள், யாதவர்கள், சவுபிஸ்என்ற பண்டாக்கள் என்ற ஜாதிகளே அதிகமானவர்கள். இந்த பண்டாக்கள் தான், ரயில்ஸ்டேஷனிலேயே யாத்திரைக்காரர்களை சந்தித்து அழைத்துக் கொண்டு ஸ்னான சங்கல்பம் முதலிய வைதீக கர்மங்களைச் செய்துவைத்து பட்டணத்திலுள்ள விநோத கட்டடம் தேவாலய முதலியவைகளைக் காட்டி பணம் சம்பாதிக்கிறார்கள். இவர்களில் மிகுந்த தனிகர்க ளிருப்பதாகவும் தெரியவருகிறது. பனியர்களில் ஒரு பிரிவார் சேட் என்றழைக்கப்பட்டு வர்த்தகம் செய்து வருகிறார்கள். மகமதியர்களும் 10 - ஆயிரக் கணக்காயிருக்கிறார்கள். இவர்களும் பலவித தொழில்செய்து ஜீவிக்கின்றார்கள்.

மதுராபுரிக்கு மேற்கே ஆக்ரா வாய்க்கால் என்ற ஒருகால்வாய் 1875-ம்வருஷத்தில் 140 மைல் தூரம் வெட்டப்பட்டு யமுனாநதியின் ஜலம்கொண்டு போகப்படுகிறது. இதனால் அனேக ஏகராபூமிகள் சாகுபடி செய்யப்படுகின்றன. இதில் படகுகளின் மூலமாக பல சாமான்கள் கொண்டுபோகப் படுகின்றன. இது வியாபார வசதிக்கு அனுகூலமாயிருக்கிறது.

காசி, காஞ்சி, அரித்துவாரம், அயோத்தி, துவாரகை, மதுரா, உஜ்ஜினி என்ற நகரங்கள் மோக்ஷத்தைக் கொடுக்கும் ஞானபக்திகளை விருத்திசெய்யும் ஸ்தலங்களென்று இதிகாச புராண வாக்கியங்களில் சொல்லப்பட்டிருப்பதால், இம்மதுராபுரிக்கு இப்பரத கண்டத்தின் பலபாகத்திலிருந்தும் பல புண்யவான்கள் சதாவந்துகொண்டிருப்பதாலும், பலரிவ்விடத்தில் திவ்வியமான தேவாலயங்களையும்

மண்டபங்களையும், தடாகங்களையும், தீர்த்த கட்டடங்களையும், சிங்காரவனங்களையும் கட்டியும், புதுப்பித்தும் வருகின்றார்கள். ஆங்கிலேயப் கவர்ண்மென்டின் நடுநிலைமையான செங்கோலின்கீழ்இந்நகரத்தில்திருடர், கொள்ளைக்காரர் முதலியவர்களுடைய பயமின்றி ஒவ்வொருவரும் சுதந்திரம் பெற்றிருப்பதால் ஆதியில் கொடுங்கோலோச்சிய மகமதியர்கள்காலத்தில் இடிக்கப்பட்டு போனதுபோக தப்பித் தவறியிருந்த தேவாலயங்களும பிந்தி கட்டப்பட்டவைகளுமாக பலதேவாலயங்களிருக்கின்றன. இவைகளில் முக்கியமானவைகள்:—

கேசவதேவர் ஆலயம்:— இது முன்னிருந்த பட்டணத்தின் மத்தியில் கம்சனுடைய கோட்டைக்குள் கட்டப்பட்டிருக்கிறது. இது ஒரு அகலத்திற்கு 6-மடங்கு நீளமுள்ள விஸ்தீரணமுள்ள கட்டடம். மத்தியில் 58-கஜம் நீளமும் 29-கஜம் அகலமுமுள்ள ஒரு மேடையின்மேல் 50-கஜ உயரமுள்ள கோபுரங்களோடு கட்டப்பட்ட கோவில். இது சுமார் 10-மைல் தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்கும் தோற்றும்படியாக விருப்பதால் அவுரங்கசீப் இதைக் கொள்ளையடிக்க கருதவே யதையறிந்த மீவார் தேசத்து அதிபதியாகிய இராணாராஜசிங்கர் அதிலிருந்த கேசவதேவர், நவநீதநாதர், மதுராநாதர் பாலகிருஷ்ணர் முதலிய சுவர்ணவிக்ரகங்களை எடுத்துக்கொண்டுபோய் உதயப்பூருக்கு அடுத்த பன்னுசு என்னும் கிராமத்தில் மறைத்து வைத்ததாகவும், கோகுலநந்தர், துவாரகநந்தர், மோஹனநந்தர் முதலிய விக்கிரகங்களை ஜெயப்பூர் அரசர்கொண்டு தமதுவசத்தில் வெகுகாலம் வைத்திருந்து கலகங்களடங்கிய பிறகு மதுராவுக்கு கொண்டுவந்து ஸ்தாபித்ததாகவும், பிறகு அவுரங்கசீப் பட்டணத்தைக் கொள்ளையடித்து கோவில்களையிடித்து கேசவதேவர் ஆலயமேடையின்பேரில் ஒரு மஜ்தை கட்டியதாகவும் கூறுகிறார்கள்,

இப்பொழுது கோட்டை மதிலுக்குப்பின்புறத்தில் இந்த கோவில் கட்டப்பட்டிருக்கிறது. இது பட்டணத்திற்கு சற்று தூரத்திலிருப்பதால் ஜனங்கள் அதிகமாக போய்வருவதாகத் தோற்றப்படவில்லை. இந்த ஆலயத்திற்கு சமீபத்தில் போத்ரகுண்டமென்று ஒரு தெப்பக்குளமிருக்கிறது. இதைச்சுற்றி பல விருக்ஷங்கள் வைத்து பயிர்செய்திருப்பதால் அலங்காரமாகக் காணப்படுகிறது. ஸ்ரீ கிருஷ்ணர் ஜனிக்கும் காலத்தில் தேவகியணிந்திருந்த சேலைகளை துவைத்து சுத்திசெய்த தீர்த்தமிதுவென்று கருதி சங்கடநிவாரணம் செய்யத்தகுந்த தீர்த்தமாக கொண்டு ஸ்னானம் முதலியவைகளை செய்கிறார்கள். குவாலியர் அரசர் இதற்கு வேண்டிய அளவு செலவு செய்து செப்பனிட்டிருக்கிறார். இப்போழுது இதில் மழைகாலத்தில் மட்டுமே ஜலமிருக்கிறது.

ஸ்ரீகிருஷ்ணர் ஜனனஸ்தானம்:—இதுமேற்படி தெப்பக்குளத்திற்குமேல் புறத்தில் ஒரு புராதனமும் உறுதியுமானகட்டடம். பலகணிகளாவது பெரிய வாயில்களாவது இல்லாததால் இருள் நிறைந்திருக்கிறது. இதில் தான் வசுதேவரையும் தேவகியையும் சிறையிலிட்டிருந்ததாகவும், ஸ்ரீ கிருஷ்ணர் இவ்விடத்தில் தான் ஜனித்தாரென்றும் சொல்லுகிறார்கள். இவ்விடத்தில் குழந்தை வடிவமான ஒருகிருஷ்ண விக்ரகத்தை வைத்துக்கொண்டு யாத்திரைகாரர்களுக்குக் காட்டுகிறார்கள்.

புத்தீஸ்வரர் ஆலயம்:—இது மல்லர்புரம் என்ற கிராமத்தையடுத்திருக்கிறது. அதற்கு சமீபத்தில் பலபத்ரகுண்டமென்கிற ஒரு குளமும், பலராமர், நரசிங்கர், கணேசர் ஆலயங்களுமிருக்கின்றன. இவைகளெல்லாம்நல்ல விசாரணையற்ற ஆலயங்களாகவே காணப்படுகின்றன.

மகாதேவர் ஆலயம்:—இது வொருபெரிய கட்டடம். அயோத்திப்பிரசாத்அவர்கள் கட்டி-

யதென்றுகூறுகிறார்கள். அதற்கடுத்து கைலாசமென்ற ஒரு சிறு குளமும் அடிவாரத்தில் விகார ரூபமுடைய ஒரு உருவாரமும் காணப்படுவதுடன், சீரில் வைக்கப்பட்டவொரு சிங்காரவனமுமிருக்கின்றது. இதற்கு சமீபத்தில் கவுதமருடைய சமாதி எனப்படுகிறதலுருஉயர்ந்த மேடை கருங்கல்லினல் கட்டப்பட்டுஒவ்வொரு யாத்திரைக்காரர்களாலும் வணங்கப்படுகிறது.

துருவமந்திரம்:—1870-வருஷம் மேல்பாகத்தில் பெரிய கடியார யந்திரம்வைக்கப்பட்டு கட்டப்பட்ட ஹார்டிஞ்கேட்என்றபெரியவில் வளைவான வாயிலின் வழியாகச்சென்றால்இந்ததுருவமந்திரத்தைக்காணலாம். இது விநோதமான பெரியகட்டடம். இதில் ஸ்ரீகிருஷ்ண விக்கிரகம் வைக்கப்பட்டு பூஜை, நைவேத்தியம், தீபாராதனை முதலியவைகள் அதிக சிரத்தையுடன் நடத்தப்பட்டு வருகிறது. இராக்காலத்தில் பஜனையும்பக்கவாத்தியங்களுடன் நடத்தப்படுகிறது.

அன்னபூர்ணி ஆலயம்:—இது கடைத்தெருவில் சுண்ணக் கற்களால் கட்டப்பட்ட அலங்காரமான கட்டடம். இதில் அன்னபூர்ணியம்மன் ஒரு அலங்காரமான மேடையில் ஸ்தாபிக்கப்பட்டு பூஜைகள் கிரமமாக நடந்துவருகிறது.

கோவிந்தஜீமந்திரம்.—இதுவும் கடைத்தெருவிலுள்ள பிர்மாண்டமான கட்டடம். உள்பக்கத்தில் ஸ்ரீகிருஷ்ணவிக்கிரகம்அமைக்கப்பட்ட ஒரு பெரிய அறையும் முன்புறத்தில் விஸ்தாரமான ஒரு மண்டபமும் காணப்படுகிறது. இவ்விடத்தில் ஜனங்கள் சதா வந்து சுவாமிதர்சனஞ்செய்து திரும்பிக்கொண்டேயிருக்கிறார்கள்.

இப்படியே இம்மதுராபட்டணத்தில் மந்திரங்கள் என்பதாக சுமார் ஆயிரத்திற்கு மேற்பட்டவைக ளிருக்கின்றதுடன் ஒவ்வொரு வீட்டிலும் ஸ்ரீகிருஷ்ணவிக்கிரகத்தை தங்கள் சக்திக்கு தக்கின விதமாய் செய்து ஒரு பரிசுத்தமானவிடத்தில் ஸ்தாபித்து பட்டாடைகளாலும் பொன்னாபரணங்களாலும் சிங்காரித்து பூஜித்துப் போற்றிவருகிறார்கள். இப்பட்டணத்தில் ஜனங்கள் சதாகாலமும் கிருஷ்ணா! என்ற கர்ணாமிர்தமான திவ்விய நாமத்தை ஒவ்வொரு சமயத்திலும் உச்சரிப்பதைப்பார்த்தால், ஒவ்வொரு தினத்திலும் அந்த கிருஷ்ணருடைய நாமத்தை குறைந்தது ஆயிரம் தடவையாவது உச்சரியாத வாயையுடையவனும், சிரவணம் செய்யாத செவிகளையுடையவனு மிரானென்று உறுதியாகக் கூறலாம்.

இப்பட்டணமானது யமுனாநதியோரத்தில் சுமார் மூன்றுமைல்தூரம் பரவி பலகோவில்களையும், சிங்கராமண்டபங்களையும், மகமதியர்களுடைய விநோதமான கோரிகளையும், மூன்றுநான்குஅடுக்குகளோடுகூடியவீடுகளையும் ஏராளமாய் தனக்குள் அடக்கிக்கொண்டிருக்கிறபடியால் சற்று உயரமான கட்டடங்களில் ஏறிப்பார்ப்பவர்களுக்கு வெகு கம்பீரமானகாட்சியையும் வியப்பையு முண்டாக்குகின்றது.

யமுனாநதியோரத்தில் விஸ்ராந்திகட்டம், கணேசகட்டம், மானசகட்டம், தசாஸ்வமேதகட்டம், கிருஷ்ணகங்காகட்டம், வசுதேவசட்டம், பிர்மலோககட்டம், கங்கதீர்த்த கட்டம், நவதீர்த்தகட்டம், ஹரிகுண்ட கட்டம் அவிமுககட்டம், யோககட்டம், பிரயாககட்டம், சூரியகட்டம், சிந்தாமணிகட்டம் துருவகட்டம், ரிஷிகட்டம், கோடிகட்டம், புத்தகட்டம் என்பதாக பல கட்டங்களிருக்கின்றன. இந்த கட்டங்களிலெல்லாம் பலமும் உறுதியுமான கற்களால் தளவரிசைகள் போட்டு பாவி, விசாலமான படிக்கட்டுகள் கட்டியிருக்கிறார்கள். கணேசகட்டத்தில்ஸநானஞ்செய்தபிறகு தான் மற்ற கட்டங்களில் செய்ய வேண்டுமென்று கூறுகிறார்கள்.

விஸ்ராந்தி கட்டத்தின் மேற்புறத்தில் பக்ஷ ஆலயங்களும் மண்டபங்களும், ஸ்ரீ கிருஷ்ணர் கம்சனைக்கொன்ற பிறகு வந்து படுத்து இளைப்பாறிய இடமென்பதாக ஸ்ரீ கிருஷ்ணருடைய அழகான கோவிலும் காணப்படுவதுடன், சதா ஜனங்கள் ஸ்நானம், ஜபம் பூஜை முதலிய சத்காரியங்களை செய்துக்கொண்டேயிருக்கிறார்கள். இந்தகட்டத்தில் கேசவ பட்டர் என்ற வித்வான் பல கிரந்தங்களை இயற்றி அரங்கேற்றியதாகவும், அநேகவித்வான்களிடம் தர்க்கஞ்செய்து ஜயித்ததாகவும், எழுவயதுடைய சைதன்னியரை ஜயிருகமாட்டாமல் இந்த கட்டத்திலேயே வெதகாலம் யோகத்திலிருந்து வந்ததாகவும், அக்சமயத்தில் மகமதியர்கள் இந்த கட்டத்டைச், இடித்து பாழாக்கும்பொழுது தன்னுடைய சில சிஷர்களுடன் போர்செய்து மகமதியர்களுடைய பெருஞ்சேனையைத் துரத்தியடித்ததாகவும் கூறுகிறார்கள்.

இந்த கட்டத்திற்கு சமீபத்தில் கம்சசாகர் என்ற ஒரு கால்வாயிருக்கின்றது. இந்த கால்வாயில்தான் கம்சனுடைய தேகத்தை இழுத்து வந்து யமுனா நதிக்கரையில் தகனஞ் செய்தார்களாம். இந்த விஸ்ராந்தி கட்டமே ஒவ்வொரு பக்கத்திலும் பன்னிரண்டு கட்டங்களைப்பெற்று மத்தியில் மிகப்பெரியதாயிருக்கிறபடியால் முக்கியமானதாயும் சிரேஷ்டமானதாயும் கருதப்படுகிறது.

யோக கட்டத்தண்டை கம்சன் எசோதையின் பெண்சிசுவைக் கொல்ல எண்ணி தன் கத்திக்குமேல் எறிய அக்குழந்தை துர்க்கையாக மாறி கம்சனை எசிச் சென்றவிடமென்பதாக ஒரு காளிகோவில் கட்டியிருக்கிறார்கள். இதற்கு அடுத்த கட்டங்களில் இராமேஸ்வரர், மஹாதேவர், பக்தநாதர், கபாலேஸ்வரர், முதலிய ஆலயங்களிருக்கின்றன. கங்கா கட்டத்தில் பலதேவரென்ற அழகும் அந்தமுமான ஒரு சிவங்கோவில் காணப்படுகின்றது.

தாராகட்டம் என்ற கட்டத்தில் ஒருகாலத்தில் ஸ்ரீ காசிராஜன்புத்திரியாக அவதரித்த யமுனாதேவிக்கு விவாகம் நடத்தப்பட்டதென்றும், அக்காரணத்தினால் இந்த கட்டத்தில் ஸ்நானஞ் செய்தால் தாரா பலனுண்டென்றும் கருதப்படுகிறது.

கண்டாபரண கட்டத்திலுள்ள ஓர் மண்டபத்தில் ஒரு பெரிய மணி கட்டியிருக்கின்றார்கள். கார்த்திகைமாதத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் தூங்குவதை மார்கழி பிறந்துவிட்டதென்று அவருக்கு தோற்றி எழுந்திருக்கும்படி கட்டப்பட்டதென்று கூறுகிறார்கள்.

துருவ கட்டத்தில் துருவர் சப்தரிஷிகளின் உத்திரவுப்படி இம்மதுராபுரியை தரிசித்து யமுனாநதியில் ஸ்நானஞ்செய்து நிஷ்டைகூடிய சமயத்தில் மகாவிஷ்ணு பிரத்தியக்ஷமாகி அழியாத பதவியைக் கொடுத்தவிடமென்று சொல்லுகிறார்கள்.

சதிபுருஷ்கட்டத்தை யடுத்து ஜெயப்பூரிலாண்ட அரசர்களுடைய சமாதிகளும் மற்ற பல சமாதிகளுமிருக்கின்றன. ஒரு சமாதியின்மேல் நான்கு அடுக்குள்ள ஒரு சிங்கார மண்டபம் கட்டியிருக்கிறார்கள். அதற்கு சமீபத்தில் சில சத்திரங்களிருக்கின்றன. யாத்திரைக்காரர்களுக்கு தங்குவதற்கு தகுந்தவைகளாயிருக்கின்றன.

இதற்கு அடுத்தவிடமே ஷஹர் என்று கூறப்படும் ஜனநெருக்கமான தெருக்களோடு கூடியபாகம் இதற்கு அடுத்த பாகம் ஜம்னா பார்க் என்ற சிங்காரவனம். இதன் மத்தியில் ஒரு அலங்காரமும் கம்பீரதோற்றமுமுடைய ஒரு மண்டபமுமிருக்கிறது. இதையடுத்து மற்றுமொரு சிங்காரவனமும் ஒரு அழகிய மண்டபமும் காணப்படுகிறது. இது மகாராஜா டவுலத்ராவ் சிந்தியா அவர்களிடத்தில் சேனைத்தலைவராயிருந்த ராபர்ட் சதர்லாண்டு என்பவரின் ஞாபகசின்னம் என்பதாகத் தெரியவருகிறது.

ஜிம்மா மசீது என்பது சுமார் 500 வருஷங்களுக்குமுன் கட்டப்பட்ட பழயகட்டடம். நான்கு பக்கத்திலுமுள்ள ஸ்தூபிகளோடு வெகு விநோதமாயும் அலங்காரமாகவும் காணப்படுகிறது.

இவைகளைத்தவிர, பலபாதைகள் செகப்பு நிறமுள்ள பலகைகற்களால் பாவப்பட்டும், அக்கற்களின் பேரில் நடப்பவர்களுக்கு மழைகாலத்தில் சறுக்காமலிருக்கும் பொருட்டு பல சித்திர அலங்காரமாகக்கொத்தியும், ஒவ்வொரு தெருவின் இரு பக்கத்திலும்கோவில்களும், மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும் விசித்திர விநோதமான சித்திர அலங்காரங்களோடுகூடிய மெத்தை வீடுகளும் கடைத்தெருவுகளும் பட்டணத்தையலங்கரிக்கின்றன. நதியானது சில கட்டடங்களில்கற்பட்டிக்கட்டுகளை யடுத்தும் சில வீட்டுங்களில் சற்று அப்புறத்திலும் ஓடிக்கொண்டிருக்கிறது. இந்நதியில் 4-5 அடிநீளமும் அதற்குத்தக்க பருமனுமுள்ள ஆமைகள் ஏராளமாயிருக்கின்றன. யாத்திரைக்காரர்கள் இவற்றிற்கு கடலை, பழம்முலலியவைகளை வாங்கி வேண்டியவரையில்போடுகிறார்கள். இவைகள் மனிதருக்கு யாதொரு தீங்கும் செய்பவைகளாகக் காணப்படாதபோதிலும் பயங்கரமானவைகளாகவே தோற்றப்படுகின்றன,

இந்த மதுராபுரியைச் சுற்றிலும் ஒரு பெரியமதில்கட்டப்பட்டுயிருந்ததாகத்தெரியவருகிறது. இது பலவிடங்களில் இடிந்து போய்விட்டாலும் சில கேட்டுகள்மட்டும் வெகு அழகாயும் ஆச்சரியமாகவும் காணப்படுகிறது. இவைகளில் முதல்தரமானது ஹோலி கேட். இந்த வழியாகத்தான் பட்டணத்திற்குள் பிரவேசிக்கவேண்டும். இது வெகு அலங்காரமான ஸ்தூபிகளுடன் கட்டப்பட்டு பார்வைக்கு அதிககம்பீரமாகக் காணப்படுகிறது.

இவற்றைத்தவிர 1870-ம் வருஷம் சர்வில்லியம்மூர் அவர்கள் காலத்தில் கட்டப்பட்ட பாடசாலைகட்டடமும், அதற்குப்பின் கட்டப்பட்ட தர்மவைத்தியசாலையும், ஐரோப்பிய பட்டாளம் தங்கட்டப்பட்டிருக்கிற 'பாரக்ஸ்' களும், கலெக்டராபீஸ், ஜட்ஜ்கோர்ட் கட்டங்களும் கிறிஸ்து கோயிலும் பார்க்கக் கூடியவைகளே. ஜட்ஜ் கோர்ட்க்குப் பக்கத்தில் கண் காக்ஷிசாலை கட்டட மொன்றுண்டு இதில் பலவிதவிநோதப்பொருள்களையும், பல புராதன விக்கிரகங்களையும் வைத்து பரிபாலித்து வருகிறார்கள்.

அன்றியும் ஹார்டிஞ் ஆர்ச் என்ற வாசல்படியுந், தேவசந்து என்பவரால் 50 ஆயிரம் செலவிட்டு கட்டப்பட்ட இராதாகிருஷ்ணர்மந்திரமும், விஜயராம் என்பவரால் கட்டப்பட்ட சத்கரமஹால் என்ற விஜயகோபிநாதர் மந்திரமும் லக்ஷ்மிசந்துசேட் அவர்களால் இலக்ஷம் ரூபாய் செலவிட்டு கட்டப்பட்டமந்திரமும், அந்தராம் சவுரி மந்திரமும் சக்கிலால் கனியலால் சேட் அவர்கள் கட்டிய கிஹார்ஜிகோவிலும். ஜகநாத்சேட் அவர்கள் கட்டியிருக்கிற கோபிநாதர்கோவிலும், பாலா மந்திரமென்ற ஆலயமும்பார்க்கத்தக்க விசித்திரஅலங்காரமான கட்டடங்கள். ஒன்றுக்கொன்றுஅழகாயிருக்கின்றனஇந்தஒவ்வொருஆலயத்திலும் வருஷத்தின் பலதினங்களில் உற்சவங்களும் பூஜைகளும் அதிகஆடம்பரமாயும் விநோத வேடிக்கைகளுடனும், பயபக்தியுடனும் கொண்டாடப்படுகிறது.

இப்படி பட்டணமானது பிரமாண்டமான சிகரங்களோடும், கோபுரங்களோடும் கலசங்களோடும்கூடிய ஆலயங்களாலும் மந்திரங்களாலும், மாடகூடகோபுரங்களாலும் மஜீதுகளாலும் நதியின் ஓரமாக நெருங்கி காணப்படுகிற கெம்பீரத்தையும், பட்டணத்தைச் சுற்றிமஹாவனம், காமியவனம், தபோவனம், குமுதவனம், பிர்ம்மவனம், இந்திரவனம் என்பனவாகிய பலதிவ்வியமான வனங்களால் சூழ்ந்தும், கோகுலம், பிருந்தாவனம், நந்திக்கிராமம், லலிதாகிராமம், பலதேவம், விஷ்ணுபுரம், முதலிய ஸ்தலங்களை எல்லையாகவமைந்

திருக்கிற தோற்றத்தையும், இவ்வனங்களிலும், ஸ்தலங்களிலும் விளங்கும் ஆலயங்களின் அழகையும், யமுனாநதியின் ஜலத்தினால் கண்களுக்குளட்டிய தூரம்பூமியானது அடைந்திருக்கும் செழிப்பையும் அதனால் சகலபதார்த்தங்களும் யதேஷ்டமாக விற்கப்படுகிற நயத்தையும், பசுக்கள் யானைகள் போல்உயர்ந்து பருத்து கூட்டங்கூட்டமாய் மேய்வதின் லக்ஷ்மிகாத்தையும், பார்த்த விடமெங்கும் நான்கு ஐந்து அடுக்குகளுள்ள மெத்தைவீடுகளும், அவைகளின்பேரில் கிருஷ்ணலீலா விநோதங்களை பாடியாடிக்கொண்டிருக்கிற பெண்மணிகளின் அலங்காரத்தையும், கொஞ்சிக்குலாவிக்கொண்டுதிரிகிறபஞ்சவர்ணக்கிளி மாடப்புறா முதலிய பக்ஷிஜாதிகளின் ஒய்யாரத்தையும் வர்ணிக்க யாரால் முடியும்! இவைகளைவிட்டு ஒவ்வொருவீட்டின் பின்புரத்திலும் ஒருபெரும்பாகத்தை ஸ்ரீ கிருஷ்ணருடைய ஆலயமாகச் செய்து அலங்கரித்து மத்தியில் நவரத்னமயமான மேடையில் ஸ்ரீ கிருஷ்ணவிக்கிரகத்தை வெகு சுந்திரமாகவமைத்து பலஆபரணங்களாலும் ஆடைகளாலும் அலங்கரித்து தினப்படிபூஜை நைவேத்தியம் முதலியவைகளை செய்துக்கொண்டு வருகிறார்கள்.

இவ்விடத்திலிருந்து பிருந்தாவனம் என்ற திவ்விய க்ஷேத்திரம் நான்கு மைமயில் தூரமிருக்கிறது. அந்த ஸ்தலத்தின் மகிமையைப் புற்றியடுத்தமுறை எழுதுவோம்.

டி. ஸி. வெங்கடரமணய்யர்.



## KANNAKI—ASCOIAL DRAMA.

## கண்ணகி.

### முதல் அங்கம்.

காதற்சிறப்பு—கலியாணப்பேச்சு.
இடம்—காவிரிப்பூம்பட்டினம்.

நாடக பாத்திரர்கள்.

மாசாத்துவன்—அந்நகரத்து வணிகன்
பெருமனைக்கிழத்தி—மாசாத்துவன் மனைவி
நந்தன்—ஷை ஊழியக்காரன்
கோவலன்—மாசாத்துவன் புதல்வன்
நீலமேகன்—கோவலனின் தோழன்
வினோதன்—கோவலனின் சேவகன், விகடமாகப் [பேசுபவன்

விசாலாட்சி | மரகதம் —கண்ணகியின் சேடிகள்

மாநாய்கன்—அந்நகரத்து மற்றோர்வணிகன்.
கண்ணகி—மாநாய்கனின் புத்திரி

வ

கண்ணகி.

அங்கம்—1] [காட்சி—1

இடம்— மாசாத்துவனின் சயனக்கிருகம்.
காலம்— இரவு.

மாசா:—(கட்டிலிற் சாய்ந்தவண்ணமாகவே தனக்குள் சொல்லிக்கொள்ளுகிறான்) ஆஹா! என்னே இறைவனின் திருவிளையாடல்! மனிதர்களுக்குச் சுகமுந்துக்கமும் மாறி மாறி வரும்படிச் செய்துகொண்டிருக்கிறார். ஓர்புத்திரனில்லையென்பதாக நான்கொண்ட துக்கமுந் துயரமும் யாரேஅறிவார் வருந்திய எனக்கு முப்பத்திரண்டு இலட்சணங்களும் பொருந்தி பாலசந்திரனைப்போல் விளங்கும். ஓர் அருந்தவப்புதல்வனை அருளிச் செய்தார். நான் அப்போது கொண்ட ஆனந்தத்திற்கு இம்மண்டலத்திருக்கும் அலைகடற் பரப்பும் அளவில் ஒப்பாகாது! மைந்தனுக்கு குழவிப்பருவம் நீங்கிவிட்டது! இப்பொழுது சகுந்த வாலிபனாகிவிட்டான்! தக்க இடத்தில் அவனுக்குவதுவைசெய்து வைக்க வேண்டுமே என்னும் கவலை என்மனதை இடையறாது வருத்திக்கொண்டிருக்கிறது! பெருமனைக்கிழத்தியோ இடைவிடாதுஎன்னைவிவாக விஷயமாகத்தொந்தரவு செய்கிறாள்! அவளைச்

சமாதானப்படுத்த விவாகத்தைச்சீக்கிரம் முடிப்பதைவிட வேறுவழியில்லை! (பெருமூச்சுடன்) காதவியை இன்றுங்காணேனே! என்வரவில்லை! (உரத்தி) நந்தா! நந்தா! (என்று கூப்பிடுகிறான்.)

நந்த:— ஏன்! ஏன்! இதோ வருகிறேன். (விரைவாகவருகிறான்) என்னை அழைத்தகாரணம்யாது?

மாசா:— உன் எஜமானி எங்கே? விரைவிற்சென்று யான் வரச்சொன்னதாகத்தெரிவி! சீக்கிரம்செல்!

நந்த:— அப்படியே! [விரைவாய் வெளியே செல்லுகிறான்.]

பெரும்:— (கூடத்தில் உட்கார்ந்துகொண்டு)என்ன பாவம் செய்து இப்பெண் ஜென்மமெடுத்தேனோ! ஸ்திரீகள்என்றால் புருஷர்களுக்கு என்ன அலட்சியம்! மிருகமுஞ்சரி ஸ்திரீகளும் சரி என்றல்லவோ நினைத்திருக்கிறார்கள்! நான் சொன்னால் "நீ பெண்பிள்ளை! உனக்கு ஒன்றும் தெரியாது! விவாகம் செய்யவேண்டியகாலம் எனக்குத் தெரியும்! உன் வேலையைப் பார்!" என்று கடிந்து பேசுகிறார். எப்போது விவாகம்செய்யஎத்தனப்படப்போகிறாரோ! (என்று தானாகவே உரத்துப் பேசுகிறாள்.)

நந்த:— அம்மணி! எஜமான் தங்களை அழைக்கிறார்கள்!

பெரும்:— எனக்கு "அழைப்பு" என்னவேண்டியிருக்கிறது! ஒன்றுந் தெரியாதவளுக்கு! அங்கென்னவேலை! போடாபோ!

நந்த:— இல்லை அம்மணி! ஏதோ அவசரகாரியம் போல் இருக்கிறது! விரைவாகவரும்படிச் சொன்னார்;

பெரும்:— சரி; நான் போகிறேன்; நீ உன்வேலையைப்பார்! [நந்தன் போய்விடுகிறான்.]

பெரும்:— (சயனக்கிருகத்துள் சென்று கட்டிலினருகில் நிற்கிறாள்).

மாசா:— (சற்றுநேரங்கழித்து) வாயிலென்ன கொழுக்கட்டையா இருக்கிறது? ஸ்தம்பம்போலிருக்கிறாயே;

பெரும்:— என்னுடைய வாயில்தான் கொழுக்கட்டை யிருந்தது; தங்கள்வாயில் இன்னேரமென்ன இருந்ததோ?

மாசா:— அம்மணி; தெரியாமற் கேட்டுவிட்டேன்; கோபித்துக்கொள்ளாதே!

பெரும்— எனக்குக் கோபமென்ன வந்தது; நான்தான் ஒன்றுந் தெரியாதவளாயிற்றே! ஏதாவது தெரிந்தாலல்லவோ கோபம் இன்னதென்று தெரியும்; என்னை அழைத்தகாணம் யாது?

மாசா:— ஒன்றுந் தெரியாதென நான் ஒன்றுந் தெரியாமற் சொல்லிவிட்டேன்! அதையே கெட்டியாகப் பிடித்துக்கொண்டாயே; தயைசெய்து மன்னித்துவிடு; நீ எல்லாம் தெரிந்தவள்; [சிரிக்கிறான்]

பெரும்:— நீங்கள்தான் எல்லாம் தெரிந்தவர்கள்; என்னை அழைத்தது யாதுகாரணம்பற்றி; அதைத் தெரிவியுங்கள்.

மாசா:— என்ன வருத்தமாக விருக்கிறாயே: அருகில் உட்காரு; சொல்லுகிறேன்.

பெரும்:— உட்காருவது பின்பாகட்டும்: அழைத்த காரியமென்ன?

மாசா:— நமது புதல்வன் கோவலனுக்கு விவாகம் செய்வதைக்குறித்துஉன்னுடன்யோசனை செய்யலாமென அழைத்தேன்!

பெரும்:— (ஆனந்த பரவசத்துடன்)பிராணநாதா! தங்களுக்கு அந்த எண்ணம் இப்போதாவதுஉண்டாயிற்றே! நான் செய்தபாக்கியமே பாக்கியம்! (அருகில் உட்காருகிறாள்).

மாசா:— எந்தவநிதையைநமதுகுமாரனுக்கு மணம் புரிவிக்கலாம்?

பெரும்:— குலமும்தக்ககுலமாகநமதுமரபிலுதித்த பெண்ணாக விருக்கவேண்டும்! இல்லாவிடில் நமது உற்றார் உறவினர் குறை கூறுவார்கள்!

மாசா:— பெண் நற்குண நற்செய்கை உடையவளாக இருக்கவேண்டும். இல்லாவிடில் பிறந்தகுலம்புகுந்தகுலம்இரண்டிற்கும்இழிவுண்டாகும். நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களும்பொருந்தி, கணவன், மாமன், மாமி, முதலானவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பவளாயிருக்கவேண்டும்!

பெரும்:— இவைகளோடு நல்ல ரூபவதியாகவும் இருக்கவேண்டும்! அப்போதுதான்நமதுகுழந்தை திருப்திஅடைவான்! அவன் மனதிற்குப்பிடிக்காதிருந்தால்நாம்செய்யும்விவாகத்தால்என்னபலன்!

மாசா:— எந்தப்பெண் நமது குழந்தைக்கு மணமகளாக யோக்கியமுடையவள்?

பெரும்:— மாநாய்கன் வீட்டுப்பெண்களைக் கேட்கலாம்!

மாசா :— அவர் வீட்டில் பெண் எது ?
பெரும் :— கண்ணகி இருக்கின்றாளே ?
மாசா :— ஆம்! ஆம்!

பெரும் :— அவள் அவருடைய அருந்தவப்புதல்வி யல்லவா!

மாசா :— ஆஹா! அப்படியா! கண்ணகியை நான் இரண்டொரு முறைபார்த்திருக்கிறேன்! என்ன குணம்! என்னரூபம்! என்ன அடக்கம்! என்ன பொறுமை! அவளே நமதுகுமாரனுக்குத்தகுந்த மணமகள்! ஆனால்,—
பெரும் :— ஆனால்... என்ன ?

மாசா :— அவர்கள்சம்மதிக்கவேண்டுமே! அம்மாது சிரோமணியை அவர்கள் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக எவ்வளவோ செல்வமாக வளர்த்துவருகிறார்கள்! தக்க இடத்தில் விவாகம் செய்து கொடுப்பார்களேயன்றி நாம் கேட்டால் கொடுப்பார்களோ? அதுதான் சந்தேகமாயிருக்கிறது!

பெரும் :— கொடுப்பார்களென்றே நினைக்கிறேன்! ஏனெனில் நமது குமாரனைப்பற்றிஅடிக்கடி அவர்கள் விசாரிக்கிறார்கள்!

மாசா :— விசாரித்தால்—கொடுப்பார்களென்று அருத்தமா என்ன?

பெரும் :— எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது! எல்லாவற்றிற்கும் நீங்கள் அவளுடையபிதாவை நேரில் கண்டு சங்கதியைச்சொல்லுங்கள்! என்ன சொல்லுகிறார் பார்ப்போம்!

மாசா :— கொடுக்கிறாரென வைத்துக்கொள்.
பெரும் :— கொடுத்தால்விவாகம் செய்துவிடுகிறது
மாசா :— என்ன கிள்ளுக்கீரையாகச் சொல்லுகிறாயே! நமது—

பெரும் :... நமது குலத்திற்கென்ன! நமது செல்வத்திற்கென்ன! என்னாம் கொள்ளக்கூடாது?

மாசா :— அவையெல்லாம் சரியாகத்தான் இருக்கின்றன! நமதுபுத்திரன் சம்மதப்படவேண்டுமே

பெரும் :—ஆமாம்! அதுயோசிக்க வேண்டிய விஷயமே!

மாசா :— நீயாக அவனைத் தனியாகக்கேட்டு அவன் அபிப்பிராயத்தை தெரிந்துசொல்லு!

பெரும் :— நாளையதினம் அவனைக் கேட்கிறேன்! என்ன சொல்லுகிறானோ பார்ப்போம்! [உறங்கி விடுகிறார்கள்]

---

அங்கம்—1] [காட்சி—2

இடம் :— காவிரியாற்றின் கரை

காலம் :— மாலைக்காலம்.

கோவலன் :— அன்பன் நீலமேகன் என் இன்னும் வரவில்லை? நான்வந்து இரண்டு நாழிகைக்கு மேலாகிறதே! அதோ ஓர் உருத்தோன்றுகிறதே! நண்பனயுத் தானிருக்கவேண்டும்! நாம் உறங்குவதுபோல் பாசாங்கு செய்வோம்!

[ஆற்றங்கரை மணல்மீது சயனித்துக் கொள்ளுகிறான்]

நீல :— (கோவலனருகில்வந்து) கோவல! என்ன உறக்கமோ? இந்த மாலைக்காலத்தில் நித்திரையென்ன? எழுந்திரு! (தட்டியெழுப்புகிறான்)
கோவல :— (நித்திரை நீங்கிவிழிப்பவன்போல்விழித்து) நீலமேகா! என் இவ்வளவு தாமதம்! தனியாகவிருந்தது என்னமோ ஓர் மாதிரியாக விருந்தது! அதனால் சற்றுப்படுத்தேன்!

நீல :— எவ்வளவு ஆநந்தமான இடமாயிருக்கிறது பார்! ஆற்றின் நீர் தங்கத்தை உருக்கிவார்த்தாப்போல் பொன்மயமாகவிருக்கின்றது! பார்வைக்கு எவ்வளவு அற்புதமாயிருக்கிறது! மந்தமாருதம் வீசுவதும், புஷ்பவகைகள் மலர்ந்து தம் கணவியாபித்திருக்கும் சுகந்தத்தை எங்கும் பரவச்செய்வதும், பட்சியினங்கள் தம் தம்கூட்டைநாடிச்செல்லும் சந்தோஷத்தால்கோஷமிடுவதும் என்ன ஆனந்தத்தை அளிக்கின்றன! இவ்விடத்திலிருந்தால் பசியெடுக்காது! கவலையிராது ஆஹா! எவ்வளவு ரமணீயமான இடம்!

கோவல :—நீ சொல்வனவெல்லாம் எனக்குச்செவிடன் காதிற் சங்க மூதுவதுபோலிருக்கின்றன! என் கவலையை மாற்ற—

நீலமே :— நண்பா! உனக்கு என்னவியாகூலமேற்பட்டது! இரண்டு மூன்று தினங்களாகமுகவாட்டத்துட னிருக்கிறாயே! கேட்டால் ஒன்றுமில்லையென்கிறாய்! என்னுடன் சொல்லக்கூடாதா?
கோவல :— ஆப்த!உன்னிடம்சொல்லக்கூடாதென்

னும் எண்ணம் இல்லை! சொல்லி உனக்கும் என் நிமித்தம்வருத்தத்தைக் கொடுப்பதில்எனக்குஇஷ்டமில்லை!

நீலமே:— நீவருந்தும்போது நான் வருந்துவது தானா கூடாது? வருத்தமென்ன?

கோவல:— ஒன்றுந் தெரியாதவனைப்போலக் கேட்கிறாயே, நண்பா! அன்றுமாலையில் என்னபார்த்தோம்!

நீலமே:— உப்பரிகையின்மேல்—

கோவல:— உப்பரிகையின்மேல் பார்த்தோமன்றோ? அவ்வஸ்துதான் என்னுடைய கவலைக்குக் காரணம்.

நீலமே:— கவலைநீங்க என்னசெய்யவேண்டுமென்கிறாய்?

கோவல:— கவலைக்குக்காரணம் எதுவோ அதுவேதான் என்கவலை ஒழித்தற்குங் காரணமாகவேண்டும்!

நீலமே:— நண்பா! நீ சொல்வது ஆச்சரியமாகவிருக்கிறதே! என்னென்றால் தணிக்கமுடியாத கேவலம் ஓர் பெண்பிள்ளையால் தீர்ந்துவிடுமென்கிறாயே!

கோவல:— கவலைக்குக் காரணம் யார்?

நீலமே:— அம்மாதரசி தானோ?

கோவல:— அதற்குச் சந்தேகமா!

நீலமே:—ஆதலால்—!

கோவல:— ஆதலால்யார்கவலையை உண்டாக்கினார்களோ அவர்களே கவலையை நீக்கவேண்டும்!

நீலமே:— சரி! சரி! பெண்வசப்பட்டுக் காமாந்தகாரனாய் வருந்துகிறாய் போலும்! நண்பா! சகலமுமுணர்ந்த உனக்கிது அழகா!

கோவல:— நண்பா! என்னவார்த்தை சொன்னாய்! காமாந்தகாரனாய் வருந்துபவன் யான் அல்லன்! நான் கொண்டிருப்பது உண்மைக்காதல்! காமத்திற்கும் காதலுக்கும்உள்ள வேறுபாடு தெரிந்தால் நீ அவ்விதம் கூறத்துணியாய்!

நீலமே:— என்னவேறுபாடு எனக்குச் சொல்!

கோவல:— சொல்லுகிறேன் கேள்; காமம் உடலைப் பற்றியது! காதல் உயிரைப் பற்றியது! உடல் எப்படி இன்று தோன்றி நாளை யழிந்து போகிறதோ அம்மாதிரியாகக் காமம் சரீரதிமுள்ளவரையில் அரை நிமிஷ இன்பத்தைப்பற்றியிருந்து பின் உடல் அழிவதுபோல் அழிந்துபோம் தன்மையுடையது! உயிர் எக்காலத்தும் அழியாதிருப்பதுபோலக் காதல் எக்காலத்தும் அழியாமல் இப்பிறப்பிலும், இனிவரும் பிறப்பிலும், இவ்வுலகத்தும் இனிவரும் உலகத்தும் நிலையாக நிற்கும் உள்ளன்பாம்! அதாவது உருவுந் திருவும், பருவமும் குலனும், குணனும் அன்பும், ஆகிய இவைகளில் ஒப்புமை பெற்றவர்களாய்க் காதற்கிழவனுங் கிழத்தியும் ஓராவிற்கு இருகோடு தோன்றினாற்போல ஒருயிர்க்கு இரு உடல் தோன்றியதென உயிர் ஒன்று, உடல் இரண்டு என்னும்படி ஒருவருக்கொருவர் அன்புபூண்டொழுகலே காதல் எனப்படும்! கேவலம் காமம் சாதாரண மிருகங்களிடத்து மிருக்கிறது! நான் கொண்டிருப்பது காமமல்ல! ஆனால் காதல்! காதல் என்பதுதான் அன்பு! அதுவே ஐசுவரியம்! அதுவே மோட்சம்! அதுவே கடவுள்! அதுதான் எல்லாம். காதலின்னதென்றும், இப்படிப்பட்டதென்றும், நான் கொண்டிருக்கும் காதல் இத்தன்மையதென்றும், தெரிந்தால் நீயென்னைப் பரிகாசம் செய்யமாட்டாய்! காதலின் சக்தியையும், மகிமையையும் யாரே சொல்லமுடியும்! ஈசன் என்ன நினைத்திருக்கிறானோ! (பெருமூச்சுவிடுகிறான்.)

நீலமே:— நண்பா! பெரிய பிரசங்கம்செய்ய ஆரம்பித்துவிட்டாயே! அதிபால்யனான நீ இவ்வளவும் எங்கே கற்றாய்? எப்போது கற்றாய்?

கோவல:— காதல் என்னும் அன்புதான் ஆன்மாவிற்குள்ள இயற்கைக் குணமாயிற்றே! அதைக் கற்றுக்கொள்வதற்கு அது வேறு குணமாயிருந்தாலன்றோ! உயிர் என்றிருந்தால் அந்த இடத்தில் காதல் இருக்கும்! காதலிருந்தால் அங்கு உயிர் இருக்கும். கண்ணகியை அடைந்தாலன்றி என் ஜன்மம் சாபல்யமடையாது! இது நிசசயம்!

நீலமே:— நீ கண்ணகிபால் காதல்கொண்டிருப்பது வாஸ்தவமே! அவள் உன்மீது காதல்கொண்டிருக்கிறாளென்பது என்ன நிச்சயம்

கோவல:— நான் கொண்டிருப்பது உண்மைக் காதலானால் அவள் என்னைக் காதலித்திருக்கிறாள் என்பதிற் சந்தேகமேயில்லை!

நீலமே:— அஸ்தமன சமயத்திற் கீழ்த்திசையில் சூரியனுதிக்குமா?

கோவல :— (கீழ்த்திசையாகத் திரும்பி) ஆம்! ஏதோ ஓர் உரு கோடி சூரியப்பிரகாசம் போல் ஒளிவீசித் திகழ்கின்றதே! யாதாயிருக்கலாம்?

நீலமே :— ஓர் பெண்மணியின் உருவத்தைப்போலத்தோன்றுகின்றது!

கோவல :— (உற்றுநோக்கி) அவ்வுருவைத் துரத்திக்கொண்டே ஆகாயமார்க்கச்சந்திரன் வருகின்றானே! என்ன விசேஷம்?

நீலமே :— (நிதானித்து) நண்பா முன்புதோன்றுவது ஓரிளங்குமரி! உணர்ந்தேன் உணர்ந்தேன்! இன்று பௌரணமியானதால் சந்திரன் முழுக்கலையுடன் கீழ்திசையில் உதயமாகிறான்! அந்நங்கை முன்பாகவருவதும் சந்திரன் பின்பாக மேகத்தில் தவழ்வதும் பார்த்தால் அவளை அவன் துரத்திவருவது போற்றோன்றுகின்றது!

கோவல :— (சற்று ஊன்றிப்பார்த்து) நண்பா! சந்திரன் நங்கையைத் துரத்திவருகின்றானென்றாயே! எனக்கு அப்படித்தோன்றவில்லை! அவன் மேருமலையையல்லவோ வலம்வருகிறான்!

நீலமே :— எதற்காக?

கோவல :— இதுதெரியாதா!

நீலமே :— எனக்குத்தெரியவில்லை! நீதான் சொல்லேன்!

கோவல :— நீலமேகா! சந்திரன் இவளுடைய முகவழகைக்கண்டு, தன்னிடத்து "முயல்" என்று சொல்லப்படுகிற களங்கமிருப்பதால் இவளுடைய முகத்திற்குத் தான் ஒவ்வாமல், குறைந்திருக்கும் உண்மைகண்டு நாணி, அம்மறுவைத் தீர்த்துக்கொள்வதற்கு ஓர் மருந்தைநாடி வடமேருகிரியை வலம் வருகின்றான்!

நீலமே :— நீ சொன்னது தான் உண்மை! என்ன காந்தி! என்னதேஜஸ்! நாமிருக்குந் திசையை நாடியன்றோ வருகிறாள்! அவளைப்பின் தொடர்ந்து இரண்டு கன்னிகைகள் வருகிறார்கள்! பார்த்தாயா?

கோவல :— ஆஹா! இவளே நான் காதல்கொண்டிருக்கும் கண்ணகி! அதிற்சிறிதும் ஐயமில்லை!

நீலமே :— நீ காதல்கொண்டது மிகவும் பொருத்தமானதே! இந்நங்கையைக் கண்ணுறும் யாவர் தான் காதல்கொள்ளார்?

கோவல :— நண்பா! நான் கொண்டிருக்கும் எண்ணத்தைச் சொல்வதற்கு வேறுவார்த்தை இல்லையே! "காதல்" என்றுசொல்லுவது போதுமானதல்ல!

நீலமே :— (சிரித்துக்கொண்டு) காதல் என்று சொல்லலாம்! காதலுக்கு மேலும் சொல்லலாம்!

விநோதன் :— (பின்புறமாக வந்துநின்று) காதல்! காதல் காதல், காதல், காதல் காதல், காதல், காதல், காதல் காதல்! எல்லாவற்றையும் ஒன்றாகப் பெருக்கிச் சொல்லுங்கள்! அப்போது சரியாகப் போய்விடுகிறது!

கோவல :— (திரும்பிப்பார்த்து) அடடே! நீ எங்கடாவந்தாய்! நாங்கள் இங்கிருப்பது உனக்கெப்படித்தெரிந்தது?

நீலமே :— ஆருடம் பார்த்தானோவென்னமோ!

விநோ :— ஆருடம் பார்க்கவில்லை! ஆறிடம் பார்த்தேன்! வந்தேன்! காதல் மறந்துபோகப் போகிறது! பெருக்கிச் சொல்லுங்களேன்!

கோவல :— எதிலடா பெருக்குகிறது!

விநோ :— கற்பலகை கொண்டுவரட்டுமா!

நீலமே :— ஏண்டா! காதலைப்பெருக்க முடியுமா!

கோவல :— சிரித்துக்கொண்டு அவனுடைய புத்தி அவ்வளவுபிரகாசம்! உலக்கைக்கொழுந்து!

விநோ :— காதலைத்தான் பெருக்கமுடியாதே! ஓர் நங்கைபால் கொண்ட காதலைப்பெருக்க முடியாதென்னும் கொள்கையுடையவர்களானல், அந்நங்கையிடம் அவர்களுக்கு உண்மை அன்பு கிடையாதென்றே சொல்லவேண்டும்! உண்மைக்காதலானல் பெருகாதிருக்குமோ?

நீலமே :— என்னடா! இவனிடம் அகப்பட்டுக்கொண்டோமே! எப்படி பதில்சொல்வது!

விநோ :— உலக்கைக் கொழுந்தும், முற்றியிலையாகி விட்டதே! அதை யோசிக்கின்றீரோ? என்காணும், குந்தாணிவேரே!

கோவல :— அடே! வாய் அதிகமாய் விட்டதா என்ன? (கோபமாய்ப் பார்க்கிறான்)

விநோ :— இல்லை பிரபு! ஒருவாய்தான்! அந்த ஒரு வாய்க்கே வருவாயில்லையே! (வருவாய்-வரும்படி.)

கோவல :— என்னடா இவன்! சிவபூஜையில் கரடியை விட்டு ஓட்ட வந்துவிட்டான்!

வினோ:— ஓஹோ! சிவபூஜையா நடக்கிறது! நல்ல பூஜை! உங்கள் பூஜைக்குப் பரமசிவன் உடனே காட்சிதந்துவிட்டுத் தான் மறுவேலை பார்ப்பார்!

நீலமே:— சிவ பூஜையினும் மேலான பூஜையடா!

வினோ:— உணர்ந்தேன்! சக்தி பூஜையா?

நீலமே:— ஆம்!

வினோ:— அதாவது கண்ணகி பூஜை! அப்படித் தானே!

கோவல:— என்னடா உளறுகிறாய்!

வினோ:— உசுறவில்லை! கண்ணகி பூஜைசெய்த தாற்றான் கண்ணகி தங்களுக்குக் காட்சி கொடுக்க அதோ வருகிறாள்!

கோவல:—(சந்தோஷத்தோடு) உன் வாக்கு முகூர்த்தமாவது பலிக்கட்டுமே!

வினோ:—பலித்தால் என்னதருகிறீர்கள்!

கோவல:—ஆயிரம்பொன் உனக்கு இனம்!

வினோ:—பை?

கோவல:—(சிரித்துக்கொண்டு) என்னடா! பொன் தரும்போது அதைப்போடுவதற்குரிய பைதர மாட்டார்களா?

வினோ:—சந்தேகம்! அதற்காகக் கேட்டேன்!

நீலமே:— என்னடா சந்தேகம்?

வினோ:—இல்லை; தேகம்!

கோவல:—பயித்தியம் பிடித்து விட்டதோடா? என்னடா தேகம்?

வினோ:—இல்லை; தேகம்! — சந்தேகம்.

நீலமே:(கோவலன் காதிற்குள் ரகசியமாகச்சொல்லுகிறான்) இவனைக்கொண்டே நாம் காரியத்தை ஒருவாறு முடித்துக்கொள்ளலாம். அவனைப்போய் அவர்களோடு கலந்து மெதுவாக நாமிருக்கும் இடத்திற்கு அழைத்துவரச் சொல்லும். நாம் அந்த நந்தவனத்தில் போயிருப்போம்

கோவல:—அப்படியே செய்வோம்!

வினோ:—(நீலமேகனைப்பார்த்து) என்காணும் என் எஜமான் காதைக்கடிக்கிறீர்?

கோவல:—நீ அவரைக்கடித்துவிடாதே!

வினோத:—நான் அவர்தானே! நாயல்லவோ கடிக்கும்.

கோவல:—இருக்கட்டும்! அதோ வருகின்ற தங்கைமார்கள் மூவரும் தனித்து இருக்கிறார்கள். அஸ்தமனமாகிவிட்டது! நீபோய் அவர்களுக்குத் துணையாயிருந்து நந்தவனம் முதலான விடங்களுக்கு அவர்கள் செல்லுவார்களானால் கூடச்சென்று, அவர்கள் திரும்பி வீடுபோய்ச்சேரும் வரையில் பாதுகாத்துக் கொண்டிரு! செல் சீக்கிரம்!

வினோ:— என்ன கருணை! என்ன அன்பு! ஆகா அப்படியே செல்லுகிறேன். (வினோதன் செல்கிறான்)

நீலமே:— ஒருவாறு—

வினோத:—(திரும்பிவந்து) ஒருசந்தேகம்! நந்தவனத்திற்கு அவர்கள் செல்லுவார்களா! அல்லது அவர்களைச் செல்லும்படிச் செய்யவேண்டுமோ!

கோவல:—உனதிஷ்டப்படி செய்! போ! (போகிறான்.)

நீலமே:—கோவல! நாம் நந்தவனத்திற்குச்சென்று அங்கு மேடைமீது இருப்போம், வா! (இருவரும் நந்தவனத்திற்குச் செல்கிறார்கள்.)



## "Free from Bonds"

### (THE AUTOBIOGRAPHY OF A TALUQ GUMASTAH)

### * அவிழ்த்துவிட்ட கழுதை.

2-வது பாகம்.

பாலியம். (விவாகம்.)

இரண்டாவது தரம் எனக்கு மெட்ரிகுலேஷன் தவறிப்போயிற்று. பிறகு என்னசெய்கிறதென்று தெரியவில்லை. என்தாயார் என்னை "நீ வீட்டோடு இருந்துகொண்டு மிகுதி இருக்கும் சொற்பநிலத்தை சாகுபடி செய்துகொண்டும் குத்தகைக்கு வேறுநிலங்களைப் பயிர்செய்துகொண்டும் இருந்தாற்போதும்" என்றாள். அது என் மாமனுக்கு சம்மதமாகவில்லை. அவர் ஒரு தாலூகா குமாஸ்தா. தாசில்தாருக்கு வேண்டியவர். அவருடைய சிபார்சின்பேரில் எனக்கு அதேதாலுகாவில் "தஸ்திரபந்து" வேலை செய்வித்தார். மாதசம்பளம் 7-ரூபா; மேல்வரும்படி நாம் தேடாமலே மாதம் 8-ரூபா கிடைக்கும். என் தாயார் நூதன விதந்துவானதால் ஊரைவிட்டுவர சம்மதிக்கவில்லை. நான் ஒருவரு

* தன்னையறிந்து தன்வழியில் பிரவேசிக்கும்மனோ தர்மசக்தி தடையறியாது.

ஷம் மாமனார் வீட்டிலேயே சாப்பிட்டுக்கொண்டு வேலைபார்த்துவந்தேன். என் தம்பிக்கு வேண்டிய படிப்பு எங்கள் ஊருக்குப்பக்கத்திலேயே இருந்தது. நான்பிரதிமாதம் என் சம்பளத்தைஎன் தாயாருக்கு அனுப்பிவிடுவேன். மேல்வரும்படியைக் கொண்டு எனக்குவேஷ்டிகள் புஸ்தகங்கள் வாங்கிக்கொள்வேன். இந்த ஒருவருஷம்மட்டும் யாதொரு கவலையுமின்றி உத்ஸாஹமாயிருந்தேன்.

அடுத்த வருஷம் என்மனைவி பெரியவளானாள். இரண்டுமூன்று மாதத்திற்கெல்லாம் சாந்தி செய்ய வேண்டுமென்று என் தாயார் சொன்னாள். நான் இங்கிலீஷ் படித்தவனானதினாலே அடுத்தவருஷமாகட்டும் என்றேன். அப்படியே அடுத்தவருஷம் எனக்குசாந்தி முகூர்த்தமாயிற்று. அதற்கு ராமுடுவந்திருந்தான். மணியனுடைய தமையனாகிய நடராஜன் இறந்துவிட்டமையால் மணியன் வரசரிப்படவில்லை என்று தெரியவந்தது. இதைக்கேட்க எனக்கு இடி விழுந்தது போலிருந்தது. நான் நடராஜனை முதல் முதல் சந்தித்ததையும் அவன் என்னிடத்தில் நிஷ்காரணமாய்க் காண்பித்த அன்பையும் அவன் எனக்குச் செய்திருக்கும் உபகாரங்களையும் ஒன்றொன்றாய் எண்ணிப்பார்க்க என்விசனம் அதிகரித்தது. இப்படியிருக்கையில் உறவினர் ஒரே கச்சேரியில் வேலைபார்க்கக்கூடாதென்று உத்தரவுவந்தது. ஆகையால்என்னைவேறொரு தாலூகாவுக்கு மாற்றிவிட்டார்கள். என் தாயார் இதைக் கேள்விப்பட்டதும் "நீங்கள் என்ன நெல்லுக் குத்துகிறவர்களா? நீங்கள் வேலை செய்யுமிடத்தில் உங்கள் உறவினர் வரக்கூடாதென்று காவல்வைக்க?" என்று கேட்டாள். "அதிலும்கேடுதான்நாங்கள்; நெல்லுக் குத்துகிறவர்கள்தங்களுக்கு இஷ்டப்பட்டால் ஒரு வீட்டுவேலையைவிட்டு இன்னொரு வீட்டுக்கு வேலைக்குப்போக இடமிருக்கிறது. எங்களுக்கு இந்த உத்தியோகத்தை விட்டால் வேறுபிழைப்பில்லை" என்றேன்.

அப்படியே வேறொரு தாலூகாவுக்குப்போய் வேலை ஒப்புக்கொண்டு, என் தாயார், மனைவி, தம்பி இவர்களுடன் குடித்தனம் செய்தல் என்னும் கிரஹஸ்தாசிரமசித்தியைப் பெற்றேன்.

என்மனைவி என்னைத்தவிர மற்றெல்லார்க்கும்நல்லவள். நான்என்மனைவியைத்தவிர மற்றெல்லார்க்கும் நல்லவன். எங்கள் இருவருக்குமுள்ளபொருத்தமின்மை எங்களிருவருக்குத்தான்தெரியும். என்தாயாருக்குக்கூடத் தெரியாது. ஊரிலெல்லாரும் என்னை "வெகுபுத்திசாலி,வெகு நல்லவர்" என்பார்கள். என்மனைவியை "வெகு நல்லபெண், வெகுசாது, அடங்கின சரக்கு" என்பார்கள். நான் வெளியில் போகும்போதெல்லாம் வெயில், பனி, படாதபடி தலையை முக்காடிட்டுக் கொண்டுபோவேன். இதைக்கண்டால் என்மனைவி "இதென்ன அழுத்த முட்டாக்கு" என்பாள். எனக்குத் தலை முடிந்துகொள்ளத் தெரியாது. என்தலை முடிச்சு தீக்ஷிதர்கள் முடிபோல் ஒருபக்கம் சாய்ந்திருக்கும். இந்த முடிச்சோடு வீட்டுக்குள் வந்தால் என்மனைவி என் தலையை அவிழ்த்துத் தானே தன்னிஷ்டப்படி முடிந்து விடுவாள். நான் மாதந்தோறும் சம்பளத்தை என் தாயாரிடத்தில் கொடுப்பேன். "மேல்வரும்படி எங்கே?" என்று என்மனைவி தினம் என்னைக்கேட்பாள். "என் செலவுக்கு வைத்துக் கொண்டிருக்கிறேன்" என்றால் அவளுக்குக் கோபம் வந்துவிடும். "உங்கள் அம்மாவினிடத்தி லிருக்கிற நம்பிக்கை என்னிடத்திலில்லையா? நான் உங்களுக்கு வேண்டும்போது கொடுக்கமாட்டேனா? எங்கள் வீட்டில் எங்கள்அப்பா சம்பளம்முழுவதும் என் கையில் தான்கொடுத்து வைப்பார்." என்பாள். இவளுக்குப்பயந்து வரும்படியில்லையென்று பொய்சொல்ல என்நாவிற்கு அப்பியாசமுண்டாவதில்லை. மேல்வரும்படி கிடைக்காத தினத்தில் "இன்றைக்கு வரும்படியில்லை" என்றால், "சாமர்த்தியம் போதாது

என் தகப்பனர் தினம் கால்ரூபாயாவதுகொண்டு வாராமல் வீட்டுக்கு வரமாட்டார்" என்பாள். இவளுடையதொந்திரவுபொறுக்கமாட்டாமல் ஒருதடவை ஐந்துரூபாயை அவளிடத்தில் கொடுத்தேன். கொஞ்சநாள் கழித்து ராமயணபுஸ்தகம் ஒன்று எனக்குத்தபாலில் வந்தது கையில் அப்பொழுது பணமில்லாமையால் என்மனைவியிடம்போய் "இரண்டு ரூபாய்கொடு, புஸ்தகம் வாங்கவேண்டும்" என்றேன். அதற்கவள் "அந்தப்புஸ்தகத்தினல் யாருக்கென்னலாபம்? இப்பொழுது விறகில்லை இரண்டுரூபாய் உண்டானல் ஆறு மாதத்திற்குவிறகாகும் குடித்தனத்துச் செலவுக்குக்கண்டு மிகுந்தாலல்லவோ நீங்கள் புஸ்தகம் வாங்கலாம்". என்றாள். சிலநாட் சென்று ஒருசாயந்திரம் நான் கச்சேரியிலிருந்து வீட்டுக்குவந்ததும், "நான் ஒரு சங்கதி உங்களைக்கேட்காமல் செய்துவிட்டேன், நீங்கள் கோபித்துக்கொள்ளாவிட்டால் நான் சொல்லுகிறேன்". என்றாள் அதற்கு நான் "என் கோபம் உன்னை என்னசெய்யமுடியும்? சொல்லு" என்றேன். "என் அட்டிகைபின்னல் பெயர்ந்தும் திருகு ஒடிந்துமிருந்தது. அன்றைக்கு நீங்கள் கொடுத்த 5 ரூபாயில் விறகு 1 ரூபாபோக 4 ரூபாகொடுத்து அடுத்தவீட்டில் கலியாணத்துக்கு வேலைசெய்யும் தட்டானிடம்அட்டிகையைப் புதுப்பித்தேன்பாருங்கள்"என்றுநகைகளைக் காட்டினாள். நான்சிரித்துக்கொண்டு இதிலென்ன எப்படியாவதுகுடித்தனச்செலவில் பணமுபயோகப்படவேண்டியது"என்றேன். நீங்கள்சிரிக்கிறது எனக்குத்தெரியும்! நான் அன்றைக்கு ராமாயணத்துக்குப் பணம்கொடுக்கமாட்டேனென்றதற்காகச்சிரிக்கிறீர்கள். ராமாயணத்தை எதற்காக விலைகொடுத்து வாங்கவேண்டும்? தினம் அடுத்ததெருவில் சாஸ்திரிகள்வாசித்துஅர்த்தம்சொல்லுகிறார், கேட்டாலும்போதும்" என்றாள். அதுமுதல் நான் என் மேல்வரும்படியில் பாதி அவளுக்குக் கொடுத்துவிடுகிறதென்றும் மற்ற என் பாதியின் செலவைப்பற்றி அவள் கேட்ககூடாதென்றும் உடன்படிக்கையாயிற்று.



## THE SONS AND DAUGHTERS OF INDIA.

## இந்தியபுத்திரர் புத்திரிகளின் சங்கம்.

(பிரம்மஸ்ரீ, ப. நாராயணய்யரவர்கள் பி. ஏ. பி. எல். எழுதியது.)

1. இப்பெயருள்ள சங்கம் புண்ணியக்ஷேத்திரமாகிய காசிநகரத்தில் மாது ஸ்ரீ அந்நிபெசண்ட் அம்மாளால் 1908௵ அக்டோபர் மாதத்தில் ஸ்தாபிக்கப்பெற்றிருக்கிறது. அதன் முக்கியக்கருத்துக்கள் என்னவென்றால்:—

(1) இந்தியாவின் கண்ணுள்ள பலஜாதியாருக்குள்ளும், பல மதஸ்தர்களுக்குள்ளும் ஐக்கியபாவத்தையும், சிநேகபாவத்தையும், அபிவிர்த்தி செய்தல்.

(2) ஜனசமூகவாழ்க்கைக்கு இன்றியமையாத லோகோபகாரங்களை அறிந்துசெய்தல்,

(3) நன்மையுள்ள எந்தக் காரியத்தை செய்தாலும், தர்மமுறைபற்றியும், சட்டநீதிமுறைவிலகாமலும் செய்யவேண்டுமென்பதுவாம்.

2. சிறுபிராயமுதற்கொண்டு, மேற்கண்ட தர்மங்களில் நம்முடைய ஜனங்கள் பழகுவாராகில், இந்தியாவின் வருங்கால நிலைமை மேன்மையுள்ளதாகவும், நேர்மையுள்ளதாகவும் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. நம்முடைய தேகத்தில் உள்ள சிறுவர்களும் சிறுமிகளும் மேற்கண்ட தர்மமுறைகள் பற்றி ஒழுகும்படியாக செய்வித்தல், பெரியோருடைய கடமை. ஒவ்வொரு தகுந்த வயதுள்ளவரும் தாம் நல்வழியில் நடக்கிறதுமல்லாமல், தம்முடைய புத்திரன் புத்திரிகள் நல்வழியில் நடக்கும்படி செய்வித்தலும் வேண்டும்.

3. ஜனங்களுக்குள் துவேஷபாவத்திற்கு காரணங்களில், முக்கியமானது சமயவேற்றுமையாம். அதற்குக்காரணம் அவரவர் பிறந்

திருக்கும் சமயத்தின் உண்மைகளையும் தத்துவங்களையும் அறியாமையாம். ஆராயுங்கால் ஆகாசத்தில் தோன்றி பூமியில் விழும் மழைத்துளிகள் பலஜலதாரைகளாகவும் வாரிகளாகவும் உண்டாகிப்பிறகு, மென்மேலேபெருகி சேர்ந்து நதிகளாகஅமைந்து கடைமுறையில் சமுத்திரம் சேருமாறுபோல ஜனங்களுடைய ஹிருதய ஆகாசத்தில் தோன்றும் பல பாவனைகளின் காரியமாக பலநாமங்கள் ஏற்பட்டு அதனால் பலவாறாக வழிபாடுகளும் ஆராதனைகளும் ஏற்பட்டாலும் கடைமுறையில் ஒரே ஈசுவரன் பாதத்தையே அடைகின்றன. எல்லாமதங்களும் ஈசுவரனிடத்தில் சேர்ப்பிக்கும் பல வழிகளாம். மார்க்கங்களில் வித்தியாசங்களிருப்பினும் அடையப்பெறும்பொருளில் வித்தியாசம் இல்லை. அது ஒன்றே.

"வேறுபடும் சமயமெல்லாம் புகுந்து
பார்க்கின் மாறுபடும் கருத்தில்லை" என்றார்.
(தாயுமானவர்.)

உற்று நோக்கிப்பார்க்கின் சமயங்கள் உண்மையாக ஒன்றுக்கொன்று வித்தியாசப்படுகிறதில்லை. அதனால் என் சமயம் உயர்வு உன் சமயம் தாழ்வுஎன்ற செருக்கைத்தவிர்த்து அவரவர் பிறந்திருக்கும் சமயத்தின் உண்மையை அறிந்து அறிந்தபடி ஒழுகுவாராகில் ஜனசமூகத்தில் க்ஷேமமும் சமாதானமும் பிறக்கும். இக்கருத்தைக்கொண்டே அடியிற்கண்ட திருமந்திரமுமாம்.

"ஆனசமயம் அது இது நன்று எனும்
மாய மனிதர் மயக்கம், அது ஒழி
கானங்கடந்த கடவுளை நாடுமின்
ஊனங்கடந்த உருவது ஆமே."

4. நந்தேசத்தில் அறிவுள்ளார் அறிவுடைமையின் உத்திரவாதத்தை உணர்ந்தாரில்லை. செல்வமுடையார் அதன் கடமையை கவனித்தாரில்லை. மேல்ஜாதியில் பிறந்தோமென்றும், உத்தமகுலத்தில் உதித்தோமென்றும் இறுமாப்புள்ளார் அவ்வவ் நிலைமைக்குரிய தர்மத்தை கைக்கொண்டாரில்லை. இந்தியா ஜனசமூகம் என்ற ஒரு விராட் புருஷனுக்கு ஒவ்வொருஜாதியாரும் ஒவ்வொரு அங்கமாகவும் அவயமாகவுமிருக்கிறார்கள். தலை, தோள், கை, இடுப்பு, கால்கள்போன்றும் இருக்கிறார்கள். ஒவ்வொரு அங்கமும் அவயமும் ஒவ்வொரு கைங்கரியம் அதாவது வேலைசெய்ய காத்தியப்பட்டுள்ளது. எல்லா அவயவங்களும் அததன் வேலையை, நேர்மையாயும், தவறுமனும் செய்யுமாகில் அப்புருஷன் சுகமாகவும் நேர்மையாகவும், நடைபெறுவான். அதனால் இந்தியா ஜனசமூகத்திற்கு க்ஷேமமுண்டு, சுகமுண்டு. அப்படிநிகழாமல் அந்தந்த அவயவங்கள் தன்தன் தொழிலைமறந்து, அல்லது அலக்ஷியம் செய்து, தான் மேலானவன் மற்றவன் கீழானவன் இருவருக்கும் சம்பந்தமில்லை என்றவிபரீத பாவனைகொண்டு நடக்குமாகில், சீர்குலைந்து, நேர்மைகுன்றி போர்மேவிட்டு, ஐக்கிய பத்தியம் அற்று, அவ்விராட் புருஷன் சரீரக்கட்டும் குலைந்தும், உலைந்தும் போய், சிதைந்த நிலைமையும் வந்துவிடும். நம்முடைய தேசத்தில் இப்போது இருக்கின்ற நிலைமை இதுவாம். மனுவால் குணகர்ம விபாகத்தினால் ஏற்பட்டுள்ள நான்கு வர்ணத்தாரும் அவரவர்கள் செய்யவேண்டும் தர்மங்களைக்கைவிட்டார்கள். சாஸ்திரவிரோதமானவும், நீதிக்குப் புறம்பானவுமான பலஉட்பிரிவான ஜாதிவகுப்புகளை அகங்காரத்தினால் உண்டு பண்ணிக்கொண்டார்கள். அவைகளால் ஜனசமூகத்தில் வேற்றுமைபாவங்கள் மேலிட்டன. ஜன சமூகவாழ்விற்குறிய பொதுநன்மைகளைச்செய்யாமல் ஒழித்தனர். "ஒப்புறவறிதல்" என்றதர்மத்தை நம்மவர்முற்றும் மறந்தனர். லோக உபகாரமான செய்கை செய்யும் வழியே ஒப்புறவறிதல் என்றார் நாயனார்.

"ஊருணி நீர் நிறைந்த உலகவாம்
பேரறிவாளன் திரு" (குறள்

கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் ஒருவரிடமிருக்குமாயின் அவை பிறருக்குப

யோகப்படவேண்டும். அன்றேல், அவர் செல்வம் இருந்தென்ன போயென்ன?

"ஒத்தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும்." (குறள்)

ஒப்புறவு (Patriotism) என்ற உயர்வான தர்மத்தை எப்பொழுது நம்மவர் திரும்பவும் அநுஷ்டிக்கப்போகின்றார்?

அப்பொழுது தான் நம் தேசத்திற்கு நற்காலம் விடியும்.

"ஒப்புரவொழுகு" என்றார் ஔவையார்.

5. ஆகையால் மதவேற்றுமையால் ஏற்படும் துவேஷபுத்தியை நீக்கவேண்டும் என்பதும், அவரவர் தம்மாலியன்றமட்டும் பொருட்செல்வம் கல்விச்செல்வத்தினுதவியால் ஜனசமூகத்தின் க்ஷேமத்திற்குறிய நற்காரியங்களைச் செய்துமுடித்தல்வேண்டும் என்பதும், இச்சபையின் கருத்து.

6. இச்சபையின் (இந்தியா முழுவதும்) தலைவர் :—மாது ஸ்ரீ அந்நி பிஸண்டம்மையார் (Mrs. Annie Besant)

இச்சபையின்காரியங்களைக் கொண்டுசெலுத்த உட்சபை (Council) ஒன்றுளது. அவ்வுட்சபையில் சென்னைராஜதானியின் பிரதிநிதியாக ம-ா-ா-ஸ்ரீ ஸர். எஸ். சுப்பிரமணிய அய்யரவர்கள் (மாஜிஹைகோர்ட்ஜட்ஜ்) அங்கத்தினராகவிருக்கிறார். ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒன்றுக்குகுறையாமல் இச்சபையின் காரியங்களை நடத்த சாப்டர் (Chapter) என்று பெயருள்ள ஒரு ஏஜெண்டிருக்கிறார். அவருக்குக்கீழாக தாலுக்கா, கிராமங்கள்தோறும் வார்டன (Warden) என்னும்பெயருள்ள ஜனங்களின் க்ஷேமத்தை பாதுகாப்பவரான ஒரு உத்தியோகஸ்தர் இருக்கிறார். அவராலும் அவருக்கு மேற்பட்ட உத்தியோகஸ்தர்களாலும் ஷை அங்கத்தினர்கள் சபையில் சேர தகுதியுள்ளவர்களென்று தெரிந்தெடுக்கப்பட்டு சேர்க்கப்படுகிறார்கள். இச்சங்கத்தில் அங்கத்தினராக சேரவிருப்பமுள்ளவர்கள் ஷை உத்தியோகஸ்தர்களால் தெரிந்தெடுக்கப்படுவது மன்றி ஜனசமூகத்தின்க்ஷேமத்தைசரியாகவும்நேர்மையாகவும்கொண்டு செலுத்திவருவோமென்று கொடுக்கப்படும் உறுதிமொழி காகிதத்தில் விலாசசகிதமாய் தங்களுடைய கைபெழுத்துப் போடவேண்டும். தவிறவும், சபையின் உத்தியோகஸ்தர் முன்பாக சிரத்தையுடனே அவ்வுறுதிமொழி பத்திரத்தைவாசித்து உறுதிசொல்லவும் வேண்டும்.

குறிப்பு — இச்சபையின அபிவிருத்தியிலும், க்ஷேமத்திலும், மகாகனம்தங்கிய இந்தியா கவர்னர் ஜனரல் (Lord Minto) லார்டு மிண்டோ அவர்களும், மகாகனம் தங்கிய சென்னை கவர்னர் (Sir Arther Lawley) ஸர் ஜிர்தர் லாலி அவர்களும் அபிமானமுள்ளார்கள்.



## THERE IS NO ASSET GREATER THAN A CULTIVATED WILL.

## மனோதைரியத்துக்கு மிஞ்சின ஆஸ்தியில்லை.

செல்வம் சகடக்கால்போல் சுழன்றுவரும் தன்மையது என்பது எல்லாருக்கும் தெரியும். "அறிடும் மேடும் மடுவும்போல் ஆம்செல்வம்" என்றார் கவிசிரேஷ்டரும் "30-வருஷம் வாழ்ந்தவனுமில்லை; 30-வருஷம் கெட்டவனுமில்லை" யென்கிற பழமொழியும் இதையே குறிக்கிறது. செல்வம் நிலையாத்தன்மையது என்று ஏற்பட்டுவிட்டால், 'பணமேபெரிது என்று கொண்டாடும் இக்காலத்தில் நிலையில்லாச் செல்வத்தை நம்பி என்ன தான் செய்யலாம். "அறிவுக்கு மிஞ்சின ஆஸ்தியில்லை" யென்பது நமது மூத்தோர் கொள்கை. அறிவுடையார் எல்லாமுடையார்" என்றார் எம்பெருமான் திருவள்ளுவநாயனாரும். அறிவை யடைந்தவனுக்கு அதுவே ஆஸ்தியன்றி வேறொன்று ஆஸ்தியில்லை. அவன் ஜனகர் கோமானைப்போல் சிம்மாஸனாதிபதியாயிருந்தாலும் ஸரி, சுகப்பிரஹ்மம், ஸதாசிவப்பிரஹ்மம் இவைகளைப்போல் ஒன்றுமில்லாதவனாயிருந்தாலும் சரி, அறிவொன்றே அழியாச்செல்வமன்றிமற்றதெல்

லாம் அவர்களுக்கு லக்ஷியமில்லை. அந்த அறிவு பெறுதற்கு சாதனம்வேண்டுமே: அதுபெறும் வரையிலாவது செல்வம் வேண்டாமா? என்றால், அப்பொழுதும் செல்வத்தை நம்பினால் மோசம்தான். பின்னை? மனோதைரியத்தைக் கைவிடாதுகொள்ளும் விவேகமே சாதகனுக்கு அழியாத ஆஸ்தியாம். அறிவுசாத்தியமானமஹான்கள்போக, அறிவுபெறமுயலும்சாதகனுக்குமனோதைரியத்துக்கு மிஞ்சினஆஸ்தி இல்லையெனபதேதுணிபு. மனோதைரியம்இல்லாவிட்டால்மனிதன் காற்றினால் தூற்றப்படும் பதருக்கு ஒப்பாவான். அதற்கு என்னமஹிமை யுண்டோ அதுதான் மனோதைரியமிழந்த அவனுக்கும். மனோதைரியம் விவேகத்தினாலன்றி வேறுவிதமாக சித்திக்கவழியில்லை. அரிச்சந்திரன், நளனைப் போன்ற மஹா ராஜாக்களுக்கு வந்த ஆபத்துக்களில்அவர்கள் நித்தியாநித்தியவஸ்து விவேகத்தினால் மனோதைரியம் பெற்றதன்றி வேறு சாதகம்அவர்களுக்குண்டா? இதுபூர்வீகத்தில்மட்டுந்தான் பொருத்தமானதுஎன்றுநினைப்பது பிசகு. உண்மையான தத்துவங்கள் எக்காலத்துக்கும்பொருந்தும் தன்மையவாம், இக்காலத்திலும் அது உண்மையே. உதாரணமாக மிஸ்டர் ஜெ. என் டாடாஎன்னும்செல்வவான் சரித்திரத்தைப் பார்ப்போமாயின் அவர்ஏழைக்குடும்பத்தில் பிறந்து தன்முயற்சியால்கோடீசுவரன் ஆகிஇந்தியா முழுமைக்கும்பரோபகாரமான "டாடா இன்ஸ்டிடியூட் "டாடாஸ்டீல்வர்கஸ்" முதலிய ஸ்வதாபனங்களை நியமித்தமேதாவி. அப்படிப்பட்ட அவருக்குதிடீரென்று ஆபத்துவந்துவிட்டது. அவர்சீமையிலிருந்தபொழுது அவருடையதகப்பனார் செய்துவந்த வியாபாரம் படுத்துக்கொண்டது. அப்பொழுது அவர் மனோதைரியத்தை விட்டு மனம்கலங்கியிருந்தாரானால் அவருடைய பேரையே நாம் கேள்விப்பட்டிருக்கமாட்டோம். ஆனால் அவர் என்னசெய்தார்?—

"வியாபாரத்தில்நஷ்டம் ஏற்பட்டுவிட்டது என்ற செய்தியைக்கேட்டதும் (சீமையிலிருந்தஅவர்) மனங்கலங்கிப்போகாமல் சமயத்துக்குத்தக்க நடவடிக்கைகளை நடத்தி அங்கே தொடங்கினதும் தொடங்காததுமாயிருந்த வேலைகளையெல்லாம் ஒதுங்கவைத்துக்கொண்டும், அந்நாட்டிலே தம்மிடத்தில் யாருக்கும் ஒருவித மதிப்பு உண்டாகும்படி செய்துவிட்டும் பம்பாய் வந்துசேர்ந்தார். இங்கே வந்துபார்த்தாலோ அவர் குடும்பமிருந்த கேவலஸ்திதியைச்சொல்லி முடியாது. அது மிகவும் சீர்கெட்டுப் போயிருந்தது இருந்த ஐவேஜியெல்லாம் போய்விட்டது. அப்போதுகூட அவர் கவலைமேலிட்டு அதைரியப்பட்டுப்போகவில்லை. சில கண்டிராக்ட்டுகள் எடுத்து லாபம் சம்பாதித்து தத்தளித்துக் கொண்டிருந்த தமது குடும்பத்தை மறுபடியும் நிலை நிறுத்தினார். அதுமுதல் மிஸ்டர் டாடாவுக்கு அதிர்ஷ்டகாலம் திரும்பிவிட்டதாய் சொல்லவேண்டும். அவர் கையால்தொட்டமண்ணும் பொன்னாகத்தலைப்பட்டது."

இப்படிப்பட்ட பரிசவேதி அவருக்குக் கிடைத்ததற்குக் காரணமென்ன? அவரது மனோதைரியமும் விடாமுயற்சியுமே. செல்வம் ஜடபதார்த்தம். மனிதனோ சித்ரூபி. ஜடம் சித்தை வெல்லுமா? அவரிடத்திலுள்ள இரகசியத்தைச் சுருங்கச்சொல்லவேண்டுமானால், அது இது:"ஒருதொழிலைச்செய்யஆரம்பித்தால் அதனைக்கடைசிவரையும்செய்துநிறைவேற்றிநிலைநிறுத்துவதற்குவேண்டியஊக்கம், உழைப்பு, மனந்தளராதவிடாமுயற்சி, புத்திகூர்மை, சமயத்துக்குத் தக்க யோசனைபோன்றசிறந்தகுணங்கள் அவரிடம்விசேஷமாயிருந்தன. அவர்எந்த தொழிலைச்செய்தாலும் அதைப்பிறர்செய்கிறமாதிரிதானும்செய்கிறதில்லை. புதுமாதிரி முறைகளைக் கண்டுபிடிப்பதிலேயே அவர்கண்ணும் கருத்துமாயிருந்து ஏதாவது ஒருபுதுமாதிரியைக்கண்டுபிடித்தே தீர்வார்,,

உண்மைத்தீரமும் உள்யோசனையுமுள்ள மனிதனுக்கும் அவையில்லாத ஆடுகளாம் மனிதர்களுக்கும் உள்ளவித்தியாசம் இதுவே.

---

## THE MAGNETIC RELATION BETWEEN WATER AND AIR.

## அப்புவுக்கும் வாயுவுக்குமுள்ள ஆகர்ஷண சக்தி.

"பத்மநாபசகோதரியை நம:"

ஓர் நூதனயந்திரம் :— நிலத்தின்கீழ் தண்ணீர் இருக்கிறதா இல்லையாவென்று நிலத்தைவெட்டிப் பார்க்காமல் தானே கண்டுபிடிக்கத்தக்க நூதனயந்

திரம் ஒன்று இங்கிலாண்ட் லிவர்பூல் பட்டணத்தில் ப்ரன்ஸ்விக் தெருவிலுள்ள மான்ஸ்பீல்ட் கம்பெனியாரால் செய்யப்பட்டிருக்கிறதாகத் தெரிகிறது. அது ஒருவகை காந்தஊசி. அதன் உதவியால் நீரூற்றுச் சுரக்கும் இடங்களைத் தாமேயறிந்து கொள்ளலாம். இந்தக்காந்த ஊசியின் மர்மம் என்னவென்றால் அப்புவுக்கும் வாயுவுக்குமுள்ள ஆகர்ஷண சக்தியே. இந்தமர்மத்தை "பத்மநாப சகோதரி"யென்னும் இரகசியநாமத்தின் லக்ஷியார்த்தத்தில் காணலாம். தண்ணீர் ஆவியாக வெழும்பி வாயுமண்டலம்சென்று கார்மேகமாகி கருணாஜலம் பொழிவதை நாம் பார்த்திருக்கிறோம். தத்துவசிருஷ்டிக்கிரமத்தை யாராய்ந்துபார்த்தால், வாயுவிலிருந்து தேயு தத்துவமும், தேயுவிலிருந்து ஆப்தத்துவமும் உண்டாகிறது. இந்த ஆப்தத்துவம் சூரியோஷ்ணத்தால் ஒரு பங்கு கடினமான உப்பாகிப் பிருதிவியம்சமாகவும் மற்றொன்று லோசன ஆவியாகி உயிரம்சமுமாகிறது. ஆகவே, பிருதிவிதத்துவமும் பிராணவாயுவும் ஆப்தத்துவத்திலிருந்து அக்னியின் சேர்க்கையால் உண்டாகிறது. ஆகையால் பிரிதிவியும் வாயுவும் மின்சாரத்தின் இருமுனைகள்போல் மிதுனசக்தியால் சேர்க்கப்பட்டு விளங்குகிறது. இந்த இருமுனையிலிருந்துமுண்டாகும் மின்சக்தி ஒன்றையொன்று நெருங்கும்பொழுது ஆணும்பெண்ணும் ஆலிங்கனம் செய்து கூடுவதுபோல ஆண்முனை பெண்முனையான இவ்விரண்டும் சேர்ந்துகூடி மின்னலும் இடியுமுண்டாகிறது. இந்த மின்னலிலிருந்து மழைரூப ஜலமுண்டாகிறது. "மின்னுக்கெல்லாம்பின்னுக்குமழை" யென்றது பொய்யல்ல. அதோமுகப்பிரவிருத்தியில் மழையாக மாறுவது ஊர்த்துவமுகப் பிரவேசமாயின் ஆகாயமாகமாறும். இதைப்போலவே நிசுவாஸக்காற்றான ஸ்தூலவாயு என்னும் ஆண்சக்தியும், உசுவாஸக்காற்றாகிய சூக்ஷ்மவாயுவாம் பெண்சக்தியும், நாசிகாமத்தியரந்தரத்தில் ஒன்றோடொன்று சேர்ந்து ஐக்கியப்பட்டுப்போக இரண்டிலும்வேறான காரணவாயு அவ்விடத்தில் ஜனிக்கிறது. இதுவே ஹடயோகிகளின் சக்திக்கு மூலாதாரமானவாயு. இது அதோரேதஸைமாற்றி ஊர்த்தரேதஸையுண்டு பண்ணத்தக்க சக்திவாய்ந்தது. உசுவாஸ நிசுவாஸ வாயுவுக்கும் அவற்றின் ஐக்கியத்தினால் அவையிரண்டும் செத்தவிடத்திலுண்டான இந்தக் காரணவாயுவுக்கும்உள்ளவித்தியாஸம்என்னவென்றால், (Electricity) மின்சாரத்துக்கும், காந்தசக்திக்கும் உள்ளவித்தியாஸமே. மின்சாரசக்தி பஹிர்முகாமாய்ப் பாயும் சக்திவாய்ந்துள்ளது. காந்தசக்தி அந்தர்முகமாகத் திரும்பியுள்ளது. பஹிர்முகசக்தி அந்தர்முகமாகத் திரும்பினால் அதற்கு காந்தசக்தியென்னும் ஆகர்ஷணசக்தியுண்டாகிறது. இந்தக்காந்தசக்தி மனிதனுக்குண்டாயிருக்குமாயின் அவன் ஊர்த்தரேதஸ் உள்ளவனாகி ஜலத்தைப்போல் சலனஸ்வரூபமான சஞ்சலமனத்தையுடையவர்களை ஆகர்ஷிக்கும் காந்தசக்தியுடையவனாகிறான். ஊர்த்தரேதஸான மனிதனுக்கு ஊசியைக்காந்த மிழுக்கின்றவாறுள்ள இந்தக் காந்தசக்தி இயல்பாயுண்டு. இதை வசிய சக்தியென்பார்கள். யேசுகிறிஸ்து இஃதையே குறித்து "And I, if ibe lifted up from the earth, shall draw all men unto me" என்று சொன்னார். அதாவது "நான் ஊர்த்தரேதஸான ஆத்மனானால், அதோரேதஸான ஜீவன்களை என்பால் இழுக்கும் சக்தியுடையவனாவேன்' என்றபடியாம். மனோசஞ்சலமுள்ளவர்கள் மகத்துக்கள்முன்சென்று அவர்கள் அருளுக்கிரங்கிநிற்குங்கால்அவர்களுக்குண்டாகும் சுகிர்தத்துக்குக்காரணம் இதுவே. இந்தமர்மம் இயற்கை இரகசியங்களிலொன்று. பிராகிருததர்மத்தையுணர்ந்தாரே இஃதை நன்றாக உணரவல்லார். யோகிகள் மஹான்கள், ஹிருதயத்தில் பசையுள்ளவர்களை இம்மர்மத்தைக்கொண்டே யறிகிறார்கள். மண்ணை மனிதன் ஹிருதயத்தில் பசை (பச்சாதாபம் அல்லது ஜீவகாருண்யம் என்னும் ஈரம்) இருப்பதை மஹான்கள் அறிவதுபோல, யந்திர தந்திர சாஸ்திரங்களில் தேர்ந்தவர்கள், பூமியின் அடியில் ஜலம் இருக்கிறதா இல்லையாவென்று கண்டுபிடிக்க இந்த மர்மத்தைக்கொண்டு அவர்கள் யுக்தியால் ஒரு காந்தஊசி யந்திரம் செய்திருக்கிறார்களென்றுதெரியவருகிறது. இதைப்பற்றிப்பத்திரிகைகளில் கண்டதோர் விவரத்தை யப்படியே கீழே பிரசுரிக்கிறோம்:—

"நிலத்திலிருந்து வாயுமண்டலத்திற்கு எப்போதும் காந்த ஓட்டம் ஒன்று இருக்கிறது. எந்த இடத்தில் கீழே நீர்ச்சுரப்பு இருக்கிறதோ அங்கே அந்த காந்த ஓட்டம் அதிகமாயிருக்கிறதென்று தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள். ஆகவே, மேற்சொன்ன காந்த ஊசியைக் கீழே நட்டுவைத்த மாத்திரத்தில் கீழே நீர்ச்சுரப்பு இருந்தால் அது அசையும்; சுரப்பு இல்லாவிட்டால் அசையாமல் நிற்கும். பூமிக்குக்கீழே ஆயிரம் அடிவரையில்உள்ள சுரப்பை இது சுலுவாய்த்தெரிவிக்குமாம். மரம் அடர்ந்த இடமாயிருந்தாலாவது இருப்புக்கட்டிடங்கள் சமீபத்திலிருந்தாலாவது அந்தக்காந்த ஊசி செவ்வையாய் வேலைசெய்வதில்லையாம். காற்று மழையில் வேலை செய்

யாது. சாதாரணமான மற்ற தினங்களில் காலை 8-மணிக்குமேல் 12 மணி வரையிலும், மாலை 2 மணிக்குமேல் 5 மணி வரையிலும், இது நீர்ச்சுரப்பை நன்றாய்த் தெரிவிக்குமென்று சொல்லுகிறார்கள்.'

---

"இந்தியன்ஸாண்டோ' என தொழில்நாமம் புனைந்த ப்ரொபெஸ்ஸர் இராமமூர்த்தியென்னும் பலாட்டியர், பீமனைப்போல் சாகஸகாரியங்கள் செய்துவருகிறார். முழுவேகத்தோடும் ஓடும் மோடார்கார் ஒன்றைத்தன் புஜபலத்தால் பின்னாலிருந்து இழுத்து நிறுத்திவிட்டார். சமீபகாலத்தில் மூன்று டன் பாரமுள்ள ஒரு யானையை அவருடைய மார்பில் தாங்கினார். இப்படிப்பட்ட அருமையான செய்கைகளைச் செய்யுமவர் நமது ராஜதானியின் வடபாகத்தைச் சேர்ந்தவர்.

---

## அலிப்பூர் வெடிகுண்டு கேஸ்.

சென்ற ஒரு வருஷகாலமாய் ஓயாமல் விசாரணை நடந்துகொண்டு வந்தமாணிக்தோலா வெடிகுண்டுக் கேஸ் என்று பிரசித்தி பெற்ற கேஸ், அலிப்பூர் ஸெஷன் ஜட்ஜ்மிஸடர் பீச்க்ராப்ட் முன்னிலையில் விசாரணையாகி வந்தது எப்பிரல் மாசத்தோடு விசாரணை முடிந்தது. அம்பொழுது அஸ்ஸெஸ்ஸர்கள் அபிப்பிராயம்மட்டும் கொடுக்கப்பெற்று, ஜட்ஜ்தமது தீர்ப்பைச் சொல்ல அவகாசம் எடுத்துக்கொண்டார். மே மீ 6 உ வியாழக்கிழமை யன்று மிஸ்டர் பீச்க்ராப்ட் அவர்கள் இந்த மஹா பிரசித்தியான கேஸில் தமது தீர்ப்பைத்தெரிவித்தார்: இக்கேஸில் குற்றஞ்சாட்டப்பட்டவர்கள் 36-பேர்கள். இவர்கள் இராஜத்துரோகம், இராஜநிந்தனை, இராஜ விரோதமான போர் செய்ய யத்தனித்தல் முதலிய குற்றஞ் சாட்டப் பெற்றுநின்றார்கள்.

பாபு அரவிந்தகோஸ் அவர்களும் இன்னும் 17-பேர்களும் குற்றவாளிகளல்லவென்று அஸ்ஸெஸ்ஸர்கள் அபிப்பிராயத்தை யொட்டி ஜட்ஜியும் தீர்ப்பு சொல்லி அவர்களை விடுதலை செய்துவிட்டார். இது எல்லாருக்கும் சந்தோஷத்தைக்கொடுக்கும்

அரவிந்த கோஸ் தம்பியான வரேந்திர குமாரகோஸும் உலாஸ்கர்டட் என்பவரும் தூக்கில் போடப்பட தண்டனை விதிக்கப்பெற்றார்கள். (இ. பி. கோட் 121, 121. A, 122-வது பிரிவுகள் படிதண்டனை.)

பின்வருகிற குற்றவாளிகள் ஆயுள்பரியந்திரம் தீபாந்தர தண்டனையும் அவர்கள் ஆஸ்தியை யெல்லாம் ஸர்க்காருக்கிழக்கவும் தண்டனை விதிக்கப் பெற்றார்கள்:—

"உபேந்திர பானர்ஜி, விபூதிபூஷணராய், ரிஷீகேச் குஞ்சாலால், வரேந்திர சந்திரசேன், ஸுதீர் குமாரகோஸ், இந்திரநாத் நந்தி, அவிநாஷ்பட்டசரியா, இந்து பூஷணராய், சைலேந்திரபோஸ், ஹேம சந்திரதாஸ்."

பின்வரும் மூவரும் 10-வருஷதீபாந்தர தண்டனையுடன் ஆஸ்தியை யிழக்கவும் தண்டிக்கப் பெற்றார்கள்:— பரேஷ்மௌலிக் நிராபாதராய், சுசீர்கோஸ்.

அசோக நந்தி, பாலகிருஷ்ணஹரிகோன், சுசீல குமார சேன் என்னும் மூவரும் 7-வருஷம் தீபாந்திர தண்டனை பெற்றார்கள்.

கிருஷ்ணஜி ஸங்யாலுக்குமட்டும் ஒரு வருஷம் காவல் தண்டனை கிடைத்தது.

ஸெஷன் ஜட்ஜ் மிஸ்டர் பீச்க்ராப்ட் அவர்கள் இந்தக்கேஸில் வெகுபொறுமையாகவும் சாந்தமாகவுமிருந்து உண்மைக்கு வொப்பவொழுகி எதற்கும் அஞ்சாமலும், மனசுபேதப்படாமலும், நடுவுநிலையாயிருந்து நியாயம் அளித்தது இங்கிலீஷ் நியாயாபதிபத்தியத்தின் கீர்த்தியை மிகவிளங்கச் செய்தது. இப்படிப்பட்டதீரர்களால் தான் ஆங்கிலேயர்பெரும் புகழும் விளங்குகிறது. அவர்கள் அதிகாரமும் செல்வாக்கும் இத்தகையவர் நடுவு நிலைமையினாலேயே நிலைத்துநிற்கும் பாண்மையதாகிறது. தர்மம் தலையெடுக்கும், அதர்மம் அழிவுறும்என்பது நித்தியமான ஸத்தியவாக்கு.

---

## தேவநாதசதகம்.

இந்நூல் மஞ்சக்குப்பத்திற்கு அடுத்த திருவகீந்புரமென்னும் க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தேவநாதப்பெருமாள்மீது சென்னப்பட்டணம் ரிவினியூபோர்ட் முதலாவது அஸிஸ்டெண்ட் உத்தியோகம் வகித்த ஸ்ரீமான்சருக்கைகிருஷ்ணமாச்சாரியார் பி. ஏ. அவர்களால் இபற்றி அச்சிட்டுச்சென்ற மாதத்தில் வெளிப்படுத்தப்பட்டது. இது மிகுந்த பக்தியினால் சைவவைஷ்ணவ மதவிதியாசமின்றிப் பொதுவாய்ப் பாடப்பட்டதாயிருக்கிறது. எல்லோரும் படிக்கும்படி சுலபமானநடையில் சந்திகளின்றி ஆழ்ந்த கருத்தமைத்தும் பாடப்பட்டதாயிருக்கிறது. இந்நூலாசிரியர் தாந்தியானிக்குங் காலத்தில் ஸேவித்த அநேக அர்யவிஷயங்களை இந்நூலில் குறிப்பித்திருக்கிறார். தமைப்போல் மற்றையரும் அடைந்தின்புறவேண்டுமென்னுங் கருத்தினால் நூலாசிரியர் இந்நூல் செய்தனர். இந்நூல் பாடசாலைகளிலுள்ள சிறு குழந்தைகளுக்குப் போதிப்பதற்குத் தகுந்ததாயிருக்கிறது.

இந்நூல் வேண்டுவோர் சென்னை, திருவல்லிக்கேணி தோடிவீதி 12 வது இலக்கமுள்ள வீட்டில் நூலாசிரியருக்கு எழுதி அரையணா தபால்கூலியனுப்பிப்பெற்றுக்கொள்ளலாம்.